# இமயம் கண்ட மூவர்



அ. நாராயணசாமி
தலைமைத் தமிழாசிரியர்
ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளி
தியாகராயநகர், சென்னை 17

[ Printed on 24 lbs. Double Crown White Printing Paper ]

பதிப்பாளர் :

**மதராஸ் பிரீமியர் கம்பெனி**

33, பிராட்வே, சென்னை 1

 1958 [விலை ரூ. 1·00

முதற் பதிப்பு—ஆகஸ்ட் 1958

# முகவுரை

ஆதிக்காலம் தொட்டுச் சேர, சோழ, பாண்டியர்களாகிய தமிழ் வேந்தர்கள் வீரம், கலை, வள்ளன்மை முதலியவற்றால் பெரும் புகழ் எய்தி வந்தனர். அவர்கள் தம் ஆணையை இமயம் வரை செலுத்திப் புகழ் கொண்டதேயன்றி, நாட்டையும் வளப்பமுறச் செய்து கலையையும் ஓங்கச் செய்தனர். அன்னாருள் இமயம் கண்டு தம் ஆணையை நிறுவி வெற்றி கொண்டு வள்ளன்மையிலும், கலை வளர்ச்சியிலும். சிறந்தோங்கிய மன்னர்களாகிய திருமாவளவன், தமிழ்ச் சுவைகண்ட பாண்டியர் பூபதி உக்கிரப் பெருவ்ழுதி, சேர நாட்டுச் செம்மல் செங்குட்டுவன் ஆகியோர் பற்றிய இந் நூல் ''இமயம் கண்ட மூவர்'' என்ற பெயரால் வரையப் பட்டது.

இந் நூல் அரசாங்கத்தாரால் விதிக்கப்பெற்ற புதிய பாடத் திட்டப்படி மாணுக்கர்கட்கு உரிய நடையில் எழுதப் பட்டது. இந்நூலை எழுதுவதற்கு, பேருதவி புரிந்த என் பேரன்பர், ஆசான், செந்தமிழ்ச் செல்வர், திரு. கி. வா. ஜகந்நாதையர் அவர்கட்கு என் உளங்கனிந்த வணக்கம் உரியன.

இந்நூலைக் கண்ணுறும், தலைமையாசிரியர்களும், தமிழாசிரியர்களும், அவ்வப்பள்ளிகளில் பாடமாக வைத்து அருளுமாறு விழைகின்றேன்.

அ. நாராயணசாமி.

Printed by Thompson & Co Private Ltd (Minerva Press)
33 Broadway Madras 1

# பொருளடக்கம்

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜெயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே !

# நாட்டு வணக்கம் - பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது ;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது ;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன ; நின்புகழைப்
[பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி !

# முன்னுரை

அமிழ்தினும் இனிய தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு ஒழுகும் இந்நிலப் பரப்பைத் தமிழகம் என்றும், தமிழ் நாடென்றும் கூறுவர். இது வடக்கே வேங்கட மலையையும், தெற்கே கன்னியா குமரியையும், கிழக்கிலும் மேற்கிலும் இரு கடல்களையும் எல்லைகளாகக் கொண்டு திகழ்ந்தது. இதனைத் தொல்காப்பியப் பாயிரத்தில்

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்,
தமிழ் கூறும் நல்லுலகத்து"

என்று கூறுகின்றார். இதனையே பாரதியார்,

"நீலத்திரைக் கடல் ஓரத்திலே நின்று
நித்தம் தவஞ் செய் குமரி எல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"

என்று கூறியுள்ளார்.

இத்தகைய பரந்த நிலப்பரப்பைக் கொண்ட தமிழகத்தை ஆதிக் காலந்தொட்டு மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர்கள் முறை தவறாமல் ஆண்டு வந்தனர். அவ்வேந்தர்கள் ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு வேந்தர் புகழுடன் ஆண்டு சிறந்தோங்கித் தம் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தனர். இம் மூவேந்தர்கள் ஆண்ட நாட்டைச் சேர நாடு என்றும், சோழ நாடு என்றும், பாண்டிய நாடு என்றும் கூறுவர்.

இவ் வேந்தர்கள் புகழும் நாகரிகமும் தமிழ் நாடன்றி அயல் நாடுகளிலும் பரந்திருந்தது. இம்

மூவேந்தர்களாலும் ஆதரிக்கப்பட்ட புலவர்கள் பலர். அப்புலவர்களால் யாக்கப்பட்ட, நூல்களும், அவர்கள் இயற்றிய செய்யுட்களும் கணக்கிலடங்கா. பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, ஐம் பெருங் காப்பியங்கள் முதலிய இலக்கியக் களஞ்சியங்களும், திருக்குறள் முதலிய பதினெண் கீழ்க்கணக்கு நூல் களும் அப்புலவர்களால் இயற்றப்பட்டவையே. அந்நூல்கள் பண்டைக்காலச் சரித்திர நிகழ்ச்சிகள், அரசர் வரலாறுகள் முதலியன அறிதற்குச் சிறந்த கருவிகளாய்த் திகழ்கின்றன.

அக்காலத்து வேந்தர்கள் வீரம் மிக்கவர்களா யும், அறிவிற் சிறந்த கலைவாணர்களாயும் விளங்கி னர். அவ் வேந்தர்கள் தம் வீரத்தைத் தமிழ் நாடன்றி வட நாட்டிலும் செலுத்தி அங்கும் தம் ஆணையை நிலைநிறுத்தினர். வட நாடு சென்று அங் குள்ள வேந்தர்களை வென்று இமயத்தில் தம் புலி-கயல்-வில் ஆகிய பொறிகளைப் பொறித்துத் திரும்பி இருக்கின்றனர். இவற்றிற்கெல்லாம் மேற் கூறிய நூல்களே எடுத்துக் காட்டுக்களாய் விளங்கும் கருவூலங்களாகும்.

அவ் வேந்தர்களுள் இமய வெற்றி கண்டதே யன்றி, காவிரிக்குக் கரை கட்டி நாட்டை வளப்படுத் திப் புகழ் எய்திய **கரிகாலன்** ; இலக்கியக் களஞ்சிய மாய்த் திகழ்ந்து அகநானூற்றைத் தொகுப்பித்த **பாண்டியர் பூபதி உக்கிரப்பெருவழுதி** ; வீரம் மிக்கவனாய்த் திகழ்ந்து, தமிழ் நாட்டுக் கற்பிற்கரசி கண்ணகிக்கு இமயத்தினின்றும் சிலை கொணர்ந்து கோட்டம் அமைத்த சேர நாட்டுச் செம்மல் **செங்குட்டுவன்**, ஆகியோர் புகழ் குன்றின் மேலிட்ட விளக்குகளாய்த் திகழ்கின்றன. அம் மூவர் வரலாறுகளையே எடுத்து இயம்புவதாகும் இந் நூல்.

# சோழர் குலத் தோன்றல்

வளவன் பிறப்பும் முடி சூடலும் :

பொன்னியாறு எனப்படும் காவிரி நதி பாய்வ தால் சிறந்த விளைநிலங்களைக் கொண்டு வறுமை யின்றித் திகழ்வது சோழ நாடாகும். அந்நாட்டின் சிறப்பினை எடுத்துக்காட்ட எழுந்த முதுமொழியே 'சோழவளநாடு சோறுடைத்து' என்பதாகும். அத்தகைய சிறப்பு வாய்ந்த சோழநாட்டில் காவிரி நதி பாய்ந்து, நீர்நிலைகள் ஓங்கி, விளைநிலங்கள் பெருக, காவிரிக்கு இருமருங்கிலும் கரை கட்டி அமைத்தான் ஒரு சோழ வேந்தன். அவனே சோழர் குல விளக்காய்த் தோன்றிய திருமாவளவன் என் னும் கரிகாலன் ஆவன்.

இளஞ்சேட் சென்னி என்பான் சோழ நாட்டை யாண்ட வேந்தன். அரசர் குலத்தில் தோன்றிய சென்னி வேளாளர் குலமே சிறந்த குலம் எனக்கருதி, சோழ நாட்டில் அழுந்தூர் என்னும் ஊரில் சிறந்த வேளாளர் குலத்தில் தோன்றிய "அழுந்தூர் வேள்" எனக் கூறப்படும் வள்ளலின் மகளையே தன் வாழ்க் கைத் துணையாக ஏற்றுக்கொண்டான்.

வீரம், கொடை முதலிய நிரம்பிய சேட் சென்னியிடம் அரசர்க்கு உரிய எல்லா அங்கங்களும் இருப்பினும், அவன் சிறப்பாகத் தேர்களை மிகுதி

யாகக் கொண்டதால் புலவர்கள் அவ்வேந்தனைச் சிறப்பித்துப் பாடுங்கால் **"உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி"** என்று கூறியுள்ளனர். அவ்வேந்தன் சோழ நாட்டில் பல வளங்களைப் பெருக்கிக் குடிமக்கள் மனம் கோணுமல் பல ஆண்டுகள் ஆண்டு வந்தான்.

இத்தகைய புகழ் வாய்ந்த இளஞ்சேட் சென்னி நோய் வாய்ப்பட்டான். அரசன் நோயினுல் பீடிக்கப்பட்டிருப்பதை அமைச்சர்களும், அறங் கூறவையத்துப் பெருமக்களும், சோழநாட்டுக் குடி மக்களும் கேள்வியுற்றனர். எப்படியும் அரசன் பிழைக்க மாட்டானு! என்ற கவலையில் ஆழ்ந்தனர். ஆனுல் மன்னவன் நிலைமையைப் பார்க்க அவர்கட்குக் கவலை எழுந்தது. மன்னவனுக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் என்ன செய்வது, என்ற கவலை மிகுந்தது. அவர்கட்கு அத்தகைய துயர் ஏற்படுவதற்குக் காரணம் உண்டு. எல்லாவிதச் சிறப்பும் எய்திய இளஞ்சேட் சென்னிக்குப் புத்திரப் பேறு இல்லாமையே அவர்கள் துயரத்தை மிகுதிப் படுத்தியது. 'இளஞ்சேட் சென்னிக்குப் பிற்காலத்தில் வழிவழியாக வந்த சோழ அரசு அற்று விடுமோ? மேலும் அங்கங்கே சோழர்குலத்தைச் சேர்ந்தவர்கள் என்று பலர் சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். அதனுல் அங்கங்கே குறுநில மன்னர்களாய் இருக்கும் வேளிர்கள் நாட்டைத் தமதாக்கிக் கொள்ளக் கலகம் விளைவிக்கக் கூடும். அப்பொழுது நாட்டின் கதி யாதாகும்?' என்ற கவலையில் மக்கள் ஆழ்ந்தனர்.

இளஞ்சேட்சென்னி காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டான். அந்நகரம் கடற்கரையை அடுத்ததாகும். அக்கடற்கரையை அடுத்தது மருவூர்ப்பாக்கம். வியாபாரிகள் கூட்டம் கூட்டமாக அங்குச் செல்வர். வியாபாரப் பண்டங்கள் மலைபோல அங்குக் குவிந்திருக்கும். வாணிபம் செய்யும் அம்மருவூர்ப்பாக்கம் திருமகள் நடமாடும் இடமாகத் திகழும். அதனை அடுத்துப் பட்டினப் பாக்கம் என்பது எழிலமைந்த கட்டடங்களைக் கொண்டதாகும். அங்கு நகரமாந்தர் எப்பொழுதும் உலாவிய வண்ணம் இருப்பர். அத்தகைய சிறப்பு வாய்ந்த காவிரிப்பூம்பட்டினம், அரசன் நோயுற்றுக் கவலைக்கு இடமாகக் கிடந்ததால் பொலிவற்றுக் கிடந்தது. மக்கள் உள்ளத்தில் மலர்ச்சியே இல்லை. இனி அரசன் பிழைப்பான் என்ற நம்பிக்கை அவர்களுக்குத் தளர்ந்துவிட்டது.

அருமதி அமைச்சர்களும், அறங்கூறவைத்தாரும் கூடிச் சோழநாட்டின் கதியைப்பற்றி ஆலோசித்தனர். என்ன பேசியும் அவர்களால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. ஏன்? சோழ நாட்டின் பேரரசிற்கு உரிமை பாராட்டுவோர் பலர். இத்துணைச் சூழ்லில் அவர்கட்கு அரண்மனைத் தாதியின் மூலம் அரசி கருவுற்றிருக்கிறாள் என்ற ஓர் அரிய செய்தி எட்டியது. இச்செய்தி சான்றோர்களுக்குப் பெருமகிழ்ச்சியை யூட்டியது. ஆனால் ஒருபுறத்தில் கவலையும் உண்டுபண்ணியது; பிறக்கும் குழந்தை

ஆணுக இருக்கவேண்டும். குழந்தை பிறந்து தக்க பருவம் அடையும் வரையில் அதைக் காத்தல் மிக அரிது. ஏன் ? இச்செய்தி நாட்டில் பரவினுல் பகைவர்கள் சோழர் குலத்தை வளர்க்க வந்த குழந்தையைக் கொல்லவும் சதி செய்வார்கள். இத்தகைய காரணங்களால் அவர்கள் இச்செய்தியை வெளியிடாமல் இருக்கத் தீர்மானித்தார்கள்.

இரும்பிடர்த்தலேயார் என்பவர் அரசியின் உடன் பிறந்தவர் ஆவர். புலமை மிக்க சான்ருேராய்த் திகழ்ந்தவர். சோழ நாட்டு நலன்காணும் அருமதி அமைச்சர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர். அந்நாட்டுக் குடிமக்கள் உள்ளத்தில் குடிகொண்டவர். ஒரு நாள் இரும்பிடர்த்தலேயாரும் அமைச்சர்களும் வீற்றிருந்தனர். அப்பொழுது அவர்கட்குப் பெருந் துயரச் செய்தி எட்டியது. மன்னவன் இளஞ்சேட் சென்னி கண்மூடிவிட்டான். யாவரும் எல்லேயற்ற துயரத்தில் ஆழ்ந்தனர். அரசர்க்கு ஆவன முடித்துவிட்டு அமைச்சர்களே நாட்டின் பொறுப்பை ஏற்றனர்.

சோழ நாட்டுக் குடிமக்களுக்கு அரசி கருவுற்றிருக்கிருள் என்ற செய்தி எப்படியோ தெரிந்துவிட்டது; இனிப்பகைவர்கள் இச்செய்தியை அறிந்து கொண்டு அரசிக்கு ஆபத்து விளேக்கச் சதி செய்வார்கள் என்று நினேத்தனர். ஆகையால் இத்தகைய சூழலில் அரசியைக் காக்க வேண்டியது மிக இன்றியமையாதது என்று தீர்மானித்து ஒரு முடி

வுக்கு வந்தனர். அரசியை வசதியான ஓரிடத்தில் தக்க பாதுகாப்புடன் இருக்கச் செய்ய வேண்டும் என்றும், குழந்தை பிறந்து தக்கபருவம் வந்தவுடன் அவர்களை அழைத்துவரலாம் என்றும் தீர்மானித்தனர். அரசியின் உடன்பிறந்தவரான இரும்பிடர்த் தலையாரே அப்பொறுப்பை ஏற்றுக்கொண்டார். இரும்பிடர்த்தலையார் ஒருவரும் அறியாத ஒரு கிராமத்திற்கு அரசியை அழைத்துச் சென்றார்; அங்கே அவர்கள் ஒரு பாதுகாப்பான இல்லத்தில் வாழ்ந்து வந்தனர்.

ஒரு சிறந்த நாளில் நல்ல ஓரையில் அரசிக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. இரும்பிடர்த்தலையார் அக்குழந்தையைப் பார்த்தார். ''எங்கே வாழ வேண்டிய குழந்தை? எங்கே வாழ்கின்றது?'' என்று ஏங்கினார். ஆனால் ஒரு புறத்தில் அவர் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. சோழநாட்டைக் காக்கத் தோன்றிய '**சோழர் குல விளக்கே**' இக்குழந்தை; இக்குழந்தையின் தோற்றமெல்லாம் இளஞ்சேட் சென்னியின் எழிலை எடுத்துக் காட்டுகின்றது,'' என்று கூறி உளம் பூரித்தார்.

இரும்பிடர்த்தலையாரும் அரசியும் குழந்தையைக் கண்ணே போல் காத்து வந்தனர். இரும்பிடர்த்தலையார் அடிக்கடிக் காவிரிப்பூம் பட்டினம் சென்று அமைச்சர்களுடன் கலந்து பேசி வருவார். அமைச்சர்களும் அரசியின் நிலையைப்

பற்றி அவர் வரும்பொழுதெல்லாம் கேட்பர். ஒரு நாள் அவர் காவிரிப்பூம்பட்டினம் சென்றதும் அமைச்சர்களிடத்து சோழ நாட்டுக் குலவிளக்காகிய வளவன் தோன்றியதை எடுத்தியம்பினுர். அச் செய்தியைக் கேட்ட அவர்கள் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லே இல்லே. 'சோழநாட்டைக் காக்கப் பிறந்தான் ஓர் செம்மல்! சோழநாடு உய்ந்தது. காலம் கருதிப் பகைவர்கள் கொட்டத்தை அடக்கலாம்' என்று பெருமகிழ்ச்சி கொண்டனர். இருப்பினும் தக்க காலம் வரும் வரையில் இச்செய்தியை வெளியிடாமல் இருக்க உறுதி பூண்டனர்.

வளவன் பிறந்த செய்தியை மறைக்கப் பார்த்தார்கள் மதியமைச்சர்கள். எப்படியோ வதந்தி பறந்தது. சோழர் குலத்தைக் காக்கச் செம்மல் தோன்றினுன் என்ற செய்தி அங்கங்கே எட்டியது. இந்நிலேயில் வளவன் வளர்பிறைபோல் வளர்ந்தான். எந்த வேளே குழந்தைக்கு ஆபத்து நேரிடுமோ என்று ஏங்கினுள் அன்னே. பனிநீரால் குளிப்பாட்டவேண்டிய தனயனேத் தன் கண்ணீரால் குளிப்பாட்டினுள்.

நாட்டிலே ஓடியாடி விளேயாடக்கூடிய பருவத்தில் இளஞ் சிங்கம் போன்ற வளவன் கூட்டிலே அடைந்திருப்பது போலிருந்தான். வளவனுடைய பேரெழிலே ஆபத்தாய் முடியுமோ என்ற அச்சம் அரசியை வாட்டியது. ஆனுல் அப்பொழுதைக்கப்

பொழுது இரும்பிடர்த்தலையார் அரசியிடம் ஆறு தல் கூறிக்கொண்டிருந்தார்.

வளவன் கல்வி பயிலும் பருவம் எய்தினன். இரும்பிடர்த்தலையார் வளவனுக்குக் கல்வி புகட்டினர். அவர் பெரும் புலவர் அல்லவா? அருந்தமிழ்ச் சுவையை ஊட்டினர். சோழநாட்டுப் பழங் கதைகளை எடுத்தியம்பினர். வளவனுடைய உடலும், அறிவும் ஒருங்கே வளர்ந்தன.

ஒரு முறை இரும்பிடர்த்தலையார் காவிரிப்பூம் பட்டினம் சென்றிருந்தார். அன்று மாலை நேரம் வந்தது. வளவன் தன் வீட்டு வாயிலில் விளையாடச் சென்றிருந்தான். குழந்தை விளையாடட்டும் என்று எண்ணி அன்னையும் உட்புறத்தே இருந்தாள். விளக்கு வைக்கும் நேரம் வந்தும் குழந்தை உள்ளே வரவில்லை. அன்னை வெளியே சென்று பார்த்தாள். வளவன் காணப்படவில்லை. ஊரெல்லாம் தேடினள். அப்பொழுதும் வளவன் கிடைக்கவில்லை. கவலைக் கடலில் ஆழ்ந்தாள்; திகைத்தாள்; துடித்தாள்; இல்லத்திற்குத் திரும்பினள். அப்பொழுது காவிரிப்பூம்பட்டினம் சென்றிருந்த இரும்பிடர்த்தலையார் "வளவன் எங்கே?" என்று கூறிக் கொண்டு உள்ளே நுழைந்தார்.

அரசி செய்தியைக் கூறினள். அவர் உள்ளம் துடித்தது. இது 'வஞ்சகர் செய்த சூழ்ச்சியேயன்றி வேறல்ல' என்று தீர்மானித்துக்கொண்டு தன் உடன்

பிறந்தாளை நோக்கி, “ கவலைப் படாதே ! எப்படி யும் குழந்தையுடன் திரும்புவேன்,” என்று கூறி விட்டு வெளியேறினுர் ; நடந்து, நடந்து சென்ருர்; ஊரைக் கடந்து கானகத்துள் புகுந்து கால்போன இடமெல்லாம் போய்க்கொண்டிருந்தார். கால் சளைத்துக் கண்ணீர் ததும்பியது. அப்பொழுதும் அவர் சளைக்கவில்லை. எப்படியும் குழந்தை கிடைத்து விடுவான் என்ற நம்பிக்கை அவர் உள் ளத்தை ஊடுருவியது.

சோழ நாட்டுக் குறுநில மன்னரின் சதிகள் மிகுதிப்பட்டன. வளவன் இருக்கும் இடத்தை ஒற்றர்கள் மூலம் அறிந்த சதிகாரர்கள் வளவனைக் கொல்லச் சதி செய்யத் துவங்கினர். இரண்டு ஆட்கள் வீதி வழியே உலாவினர். வளவன் விளை யாடிவிட்டு வீட்டிற்குச் செல்லும் சமயத்தில் அவனை அப்படியே கட்டி அணைத்துச் சென்று விட்டனர். வளவனே அவர்களிடமிருந்து மீளத் தன்னுல் இயன்றவரை முயன்ருன். வலியர் முன் யாது செய்ய இயலும்? அவர்கள் அவனை எடுத்துக்கொண்டு வெகு விரைவாக ஒரு கானகம் சென்றனர். அவ் வலியர், சதிகாரர் தங்களுக்கு இட்ட ஆணையின்படிச் செய்யத் தீர்மானித்தனர். காட்டின் இடையே அமைக்கப்பட்ட ஒரு குடிலில் அவனை வைத்துச் சிறை செய்தனர். அம்மட்டோ ! குறித்த காலத்தில் திரும்பி வந்து அக்குடிலுக்குத் தீ வைத்துவிட்டு மறைந்தனர். கூரையின் மேல் தீ பற்றியது; நன்ரு

கப் பிடித்துக்கொண்டது. மூங்கிலெல்லாம் பட பட வென்று வெடித்தன. அக்குடிலுக்குள் சுற்றிச் சுற்றி வந்த வளவன் தீப் பிடித்ததை அறிந்து தாழிடப் பட்ட கதவினை காலால் உதைத்துப் பார்த்தான். ' அம்மா ! மாமா ! ' என்று அலறினன். ஒரு மூலை யில் ஒதுங்கி ஒன்றிக் கொண்டான். கொழுந்துவிட் டெரியும் தீ அவனிடம் நெருங்கும் நிலை எய்தியது.

வளவனைத் தேடிக் கொண்டு கானகத்தின் வழியே வந்துகொண்டிருந்த இரும்பிடர்த்தலை யார், குடில் பற்றி எரிவதைப் பார்த்தார். அவ ருக்கு ஒரு நடுக்கம் ஏற்பட்டது. ஓடினர் தீப் பிடித்த இடத்திற்கு. மூங்கில்கள் வெடிக்கும் ஒலி யின் வேகத்திலும் '' மாமா, மாமா '' என்ற ஒலி அவர் காதில் பட்டது. '' வளவா, வளவா '' என்று பதில் கொடுத்துக் கதறினர். உள்ளே தன்னைக் கொல்லத் தாவி வரும் தீயின் இடையில் ஒன்றிக் கொண்டிருந்த வளவனுடைய காதில் அவ் வொலி கேட்டது. தாவி வரும் தழலையும் நோக்காது எட்டிப் பார்த்தான். பெருங் கற்களினல் உடைத் தெறியப்பட்ட கதவு கீழே விழுந்தது. மாமனைப் பார்த்த வளவன், தீயை மிதித்துச் சென்று தன்னை எடுக்க வந்த அவரைப் பற்றிக்கொண்டான். கால் எல்லாம் தீப்பற்றிக் கொண்டது. மயக்கமுற்றுச் சோர்ந்தான்.

சிறிது நேரம் கழிந்தது. வளவன் நினைவு தோன்றிப் பார்த்தபோது, தான் ஒரு கட்டிலில் படுத்

திருப்பதை உணர்ந்தான். அருகில் இருந்த மாமனைப் பார்த்து "நான் எங்கு இருக்கிறேன்" என்று கேட்டான். இரும்பிடர்த்தலையார் அவனைப் பார்த்து, "குழந்தாய்! கவலைப்படாதே; உன் தாய் வந்து விடுவாள். உன்னுடைய எரிச்சல் நோயும் நீங்கிவிடும்" என்று ஆறுதல் கூறினர்.

இரும்பிடர்த்தலையார் அவனைச் சேர நாட்டைச் சேர்ந்த கருவூரில் ஒரு சிறிய குடிலுக்கு எடுத்து வந்தார். சோழ நாட்டில் உள்ள தன் சகோதரியையும் வரவழைத்து அங்கேயே இருக்குமாறு செய்தார். வளவனுக்கு இனி எந்த நேரத்திலும் ஆபத்துக்கள் நேரும் என்று கருதிய அவர், சோழ நாட்டில் இருப்பதைக் காட்டிலும், கருவூரில் ஒருவரும் அறியாத தனிப்பட்ட இடத்தில் இருப்பதே நல்லது என்று உறுதி கொண்டார். சிறந்த மருத்துவர்களைக் கொண்டு அவன் நோய்க்குச் சிகிச்சை செய்தார். எரிச்சல் நோய் நீங்கினாலும், காலில் தீப்பட்ட இடம் கருப்பாகவே காட்சி யளித்தது. அதனால் அவன் பெயர் **கரிகாலன்** என வழங்கலாயிற்று.

அவ்வூர் மக்கள் யாவரும் அவர்களை இன்னார் என்று அறியாமல் இருந்தனர். இரும்பிடர்த்தலையாரும் காவிரிப்பூம் பட்டினம் செல்லுவதை நிறுத்திக் கொண்டனர்.

**திருமாவளவன் முடிசூடல் :**

'திருமாவளவன் மேலும் மேலும் வளர்ந்து வருவான்; சோழ ஆட்சிக்கு நற்காலம் வந்துறும்

என்று காவிரிப் பூம்பட்டினத்தில் அமைச்சர்களும், சான்றோர்களும் எதிர்பார்த்தனர். அவர்கள் அரசன் இல்லாத காரணத்தால் பலவித இன்னல்களுக்கு ஆளாயினர். நாட்டை அரசனின்றி எவ்வளவு காலம் காக்க முடியும்? அடிக்கடி வந்து சென்ற இரும்பிடர்த்தலையாருடைய வருகையும் நின்று விட்டது. வளவனை எதிர்பார்த்திருந்த சோழ நாட்டு மக்களுக்கு அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை. பகைவர்கள் நாட்டில் பலவித வதந்திகளைப் பரப்பி விட்டனர்; நாள் தோறும் ஆபத்தைத் தரக்கூடிய செய்திகள் எட்டின. சேர நாட்டு ஒற்றர்களும், பாண்டி நாட்டு ஒற்றர்களும் நாட்டை ஊடுருவித் திரிகின்றார்கள் என்ற செய்திகள் எழுந்தன. இவற்றையன்றி அரசனில்லா ஊரில் குடியிருத்தல் தகாது என்று குடிமக்கள் கிளர்ச்சி செய்தனர்.

இத்தகைய சூழ்நிலையில் செய்திகள் அலை அலையாக வந்து மோதும்போது அமைச்சர்களால் என்ன செய்ய முடியும்! நாட்டில் அமைதி குன்றியது. நாட்டின் நிலை யாதாகுமோ, என்ற அச்சம் அவர்களுக்கு ஏற்பட்டது.

பகைவர்கள் தாங்கள் திருமாவளவனுக்கு ஆற்றிய சதி பலித்து விட்டதாகக் கருதினர்; மறைமுகமாக வளவன் இறந்து விட்டான் என்ற வதந்தியைக் கிளப்பி விட்டார்கள். அவை சோழ நாட்டில் புகுந்து, அமைச்சர்கள் உள்ளத்தில் பாய்ந்து

அவர்களை வாட்டியது. பலவித வதந்திகளை நம்பாத அவர்களுக்கு இந்தப் புது வதந்தியில் நம்பிக்கை ஏற்பட்டது. மேலும் அடிக்கடி வந்து செல்லும் இரும்பிடர்த்தலையாரது வருகை நின்றுவிட்டதே அவர்கள் ஐயுறவை மிகுதிப்படுத்தியது.

இத்தகைய சூழ்நிலையில் சோழ நாட்டிற்குரிய ஓர் அரசனைத் தெரிந்தெடுத்து அவன் கையில் நாட்டை ஒப்புவிப்பது முறை என்று சிலர் கருதினர். ஆனால் சோழர் குலத்தோடு தொடர்புடையவர்கள் என்று பலர் சொல்லிக் கொண்டு திரிகின்றனர். அவர்கள் நாட்டு நலனைக் கவனிக்கக் கூடியவர்களா? அத்தகையோரில் யாரை என்ன முறையில் தெரிந்தெடுப்பது?' என்ற உரையாடல்கள் எழுந்தன. இத்தகைய சிக்கல்கள் நிறைந்த சூழ்நிலையில் "**கடவுள்அருள் செய்ய வேண்டுமேயன்றி வேறு வழியில்லை**" என்றார் ஒரு பேரமைச்சர்.

சோழ நாட்டிற்குரிய அரசனைக் கடவுள் அருளால் தெரிந்தெடுக்க வேண்டும் என்று அப்பேரமைச்சர் கூறிய கூற்றுக்களை ஏற்ற ஏனைய அமைச்சர்கள், அவரையே கடவுள் அருள் செய்வதற்கு உரிய வழியை ஆய்ந்து கூறுமாறு கேட்டார்கள்: உடனே அவர் கூறினார். "பண்டைக் காலத்தில் அரசரைத் தெரிந்தெடுக்க ஒரு வழக்கம் உண்டு; பட்டத்து யானையின் கையில் இறைவன் திருவருளை நினைத்து மாலையைக் கொடுப்பார்கள். மாலையைப் பெற்ற யானை, யாருடைய கழுத்தில்

அம்மாலையைப் போடுகிறதோ, அவனே நாடாளும் வேந்தன் என்று தெரிந்தெடுப்பார்கள். அம்முறையினையே நாமும் கையாளுதல் நலமெனத் தோன்றுகிறது,'' என்று கூறினார். அப்பேரமைச்சர் கூறிய கூற்றுக்களை யாவரும் ஏற்று அவ்வாறே செய்தல் நலமெனத் தீர்மானித்தனர்.

அரசன் இல்லாத காரணத்தால் பட்டத்து யானையைக் காவிரிப்பூம் பட்டினத்திற்கு அருகில் உள்ள கழுமலம் என்னும் ஊர்க் கோவிலில் விட்டு வைத்திருந்தனர். இன்று வழங்கும் சீர்காழிப் பதியே அக்காலத்தில் கழுமலம் என்ற பெயருடன் விளங்கியது. அரண்மனையில் வளர்ந்த யானை அரசனில்லாத காலத்தில் ஆண்டவன் சன்னிதியில் இருத்தல் நலமெனக் கருதி அவ்வாறு விட்டு வைத்தனர்.

கோயிலில் கட்டியிருந்த யானை வெளியிலே கொணரப் பட்டது. ஒரு நன்னாளில் அப் பட்டத்து யானையை முகபடாம் முதலியவற்றோடு அலங்கரித்தனர். யானை அலங்கரிக்கப்பட்டவுடன் மிக்க எழிலுடன் நின்றது; ஆண்டவனைத் துதித்து, அதன் கையில் மாலையைக் கொடுத்தார்கள். கட்டவிழ்த்து விடப்பட்ட யானை கையிலே மாலையுடன் காலாற நடந்தது. இறைவன் திருவருளால் சோழ நாட்டிற்கு ஓர் சிறந்த வேந்தன் கிடைப்பான் என்ற நம்பிக்கையால் மக்கள் யாவரும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தனர்.

பட்டத்து யானை மாலையுடன் செல்லும் பொழுது அங்கங்கே உள்ள மக்கள் அதனை வழிபட்டனர். அது மேற்குத்திசையை நோக்கிச் சென்றது. பலர் யானையைத் தொடர்ந்து பின் சென்றனர். யானை ஒவ்வொரு ஊராய்க் கடந்து சென்றது. '' எந்த ஊரில் எந்தக் குடிசையில் சோழ நாட்டை ஆளும் மன்னன் பிறந்துள்ளானோ?'' என்று பேசிக் கொண்டு பின் சென்றனர் பலர். யானை சோழ நாட்டைக் கடந்து மேற்கெல்லையை அணுகிற்று.

யானையின் அற்புதச் செயலை அறியத் தமிழ் நாடு முழுவதும் காத்திருந்தது. இவ்வாறு ஒவ்வொரு நாட்டிலும் நிற்காத யானை இறுதியில் சேர நாட்டின் பகுதியாகிய கருவூர் என்னும் ஊரில் நுழைந்தது. அவ்வூரையே ஊடுருவிப் பட்டத்து யானை ஓர் குடிலின் முன் வந்து நின்றது. இதை எதிர் பாராத அவ்வூர் மக்கள் யாவரும் திகைத்தனர். அவ்விடத்தில் ஊரே கூடிவிட்டது. அக்குடிலினின்றும் வெளியே வந்தான் ஓர் இளைஞன். அவனே சோழ நாட்டின் சுடர் விளக்காய்த் தோன்றிய கரிகாலன் ஆவான். அவனைக் கண்டவுடன் களிறு அவன் கழுத்தில் மாலையை இட்டு அவனைத் தன் மத்தகத்தின் மேல் வைத்துக் கொண்டு வெகு வேகமாகப் புறப்பட்டுவிட்டது. (அட்டைப் படம் காண்க) இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த இரும்பிடர்த்தலையார் முதலில் சற்றுத்

திடுக்கிட்டாலும், பின்பு இது ஆண்டவன் திருவருள் என்று எண்ணினார்.

யானை கரிகாலனைக் காவிரிப்பூம்பட்டினத்திற்கு எடுத்துச் சென்றது. சதிகாரர்கள் சதியினின்றும், வஞ்சகர் சூதினின்றும் தப்பி மறைவாயிருந்த கரிகாலனை ஆண்டவன் திருவருள் '**இவனே சோழர் குலத் தோன்றல்**' என்று அறிவித்து விட்டது. சோழ நாடு இத்தகைய பேற்றைப் பெற்றதால் மக்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. செயல் நடுங்கிச் சோர்ந்தனர் பகைவர். தக்க பருவம் வரப் பெறாத கரிகாலனைச் சான்றோர்களும், அமைச்சர்களும் அரியாசனத்தில் ஏற்றி முடிசூட்டுவித்தனர். திருமாவளவன் சிங்காதனம் ஏறினான். மங்கி இருந்த சோழ நாடு ஒளிபெற்றது.

**போரும் வெற்றியும் :**

'மறைந்திருந்த மாணிக்கத்தைக் கண்டுபிடித்தது பட்டத்து யானை' என்ற மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர் சோழ நாட்டுக் குடிமக்கள். திருமாவளவனும், கற்கவேண்டிய கலைகளையெல்லாம் தன் மாமனிடத்திலே முறைப்படிக் கற்றுவிட்டான். படைப் பயிற்சிகளை அவன் எளிமையில் கற்றான். 'மீன் குட்டிக்கு நீந்தப் பழக வேண்டுமா ?' திருமாவளவன் சின்னஞ் சிறு பாலகனாய் இருப்பினும் நாட்டைப் பகைவர்களிடத்திலிருந்து காப்பதே தன்

னுடைய முதற் குறிக்கோள் எனக் கொண்டான். அதற்காக நாட்டின் படை வலியைப் பெருக்கினன்.

சோழ நாட்டு மக்கள், அவன் பெருமையையும், இளமையிலே கொண்ட ஆற்றலையும் கண்டு வியந்தார்கள். மேலும் சோழ நாட்டுப் படை வீரர்கள் தமக்குத் தலைவன் ஒருவன் இருக்கின்றான் என்ற தைரியத்தால் பகைவர்களை எதிர்த்துப் போர் செய்யும் ஆற்றலைப் பெற்றனர். முடிசூடியவுடன் மன்னவன் முதல் வேலையாக படையைப் பெருக்குவதைக் கண்டு நாட்டு மக்களெல்லாம் மகிழ்ந்தார்கள். 'சிங்கங்குட்டி பிறந்தவுடன் யானையின் மீது அல்லவா பாயும்!' என்று கூறி வியந்தார்கள். இத்தகைய நிலையில் அந்நாட்டு மக்களுக்கே வேறு கவலையும் ஏற்பட்டது; "சோழ நாட்டு வளப்பத்தைக் கண்டு தருணம் அறிந்து அரசனை வீழ்த்துதுவதற்குக் காத்துக்கொண்டிருக்கிறார்கள் சில குறுநில மன்னர்கள்" என்று ஐயம் கொண்டார்கள். அது உண்மையே.

சோழ நாட்டு ஆட்சியை உரிமை பாராட்டிக் கொள்ளை கொள்ள நினைத்த வேளிர்கள் இனிக் கரிகாலனோடு போர் செய்துதான் வெல்லமுடியும் என்று தீர்மானித்தார்கள். மேலும் கரிகாலன் படையைப் பெருக்குவதற்குள் தாங்கள் போர் செய்து சிம்மாசனத்தைக் கைக்கொள்ள

வேண்டும் என்று உறுதி பூண்டனர். இத்தகைய வேளிர்கள் பதினொரு பேர்கள் ஒன்றுகூடினர். அவர்கள் ஒன்றினாலும் சோழ வேந்தனுடைய படை வன்மை தமக்குக் கிடையாது என்று தீர்மானித்தார்கள். ஆகையால் சோழ நாட்டு வேளிர்கள், பெரு வேந்தர்களாகிய சேர பாண்டியர்களைச் சேர்த்துக்கொண்டு போர் தொடுக்க எண்ணினர். சில வேளிர் பாண்டிய நாட்டு வேந்தனிடம் சென்று தங்கள் நாட்டு மன்னன் சிறியவன் என்றும், சோழனுடன் போர் துவக்கினால் வேளிர்களாகிய தாங்கள் உதவி புரிவதாகவும் கூறினர். பாண்டிய மன்னன் முதலில் சிறிது தயங்கினாலும் பின்னர் மண்ணாசை காரணத்தினால் உடன்பட்டான்.

பெருஞ்சேரலாதன் என்பான் சேரநாட்டை ஆண்டு வந்தான். வேளிர்கள் அவனிடமும் சென்றனர். தங்கள் எண்ணத்தைக் கூறினர். சேரலாதன் தானே வந்து உதவிபுரிவதாக உடன்பட்டான். பதினொரு வேளிரும் பாண்டியரும், சேரரும் சோழனை எதிர்க்கத் தீர்மானித்தனர்.

சோழன் கரிகாலன் அரியணையில் வீற்றிருந்தான். திடீரென்று சான்றோர்கள் செய்திகளைக் கொணர்ந்தனர். சேர வேந்தன் படைகளுடன் பாண்டி நாட்டின் வழியே சோழ நாட்டின் தென் பகுதியில் புகுந்து ஆங்குள்ள வேளிர்களையும் அவர்கள் படைகளையும் சேர்த்துக் கொண்டு வருகின்றான்

என்றும், தெற்குப் பகுதிகளில் சில இடங்களை வென்றுகொண்டு, மேலும் வடக்கு நோக்கி வருகின்றான் என்றும் கூறினர். இச் செய்திகளைக் கேட்ட கரிகாலன் தயங்கவில்லை. சின்னஞ் சிறு மன்னன்; தோள் தினவெடுத்தது; படைகளைத் திரட்டச் சொன்னான்; சோழர் படைகட்குப் பேரூக்கம் அளிக்கச் செய்தான்; வாளேந்திக் களிறேறிப் போருக்குப் புறப்பட்டான்.

கரிகாலன் வீரத்தையும், மனவலிமையையும் கண்ட சான்றோர்களும், அமைச்சர்களும், மேலும் படைவலியை மிகுதிபடுத்தலாயினர். இரும்பிடர்த் தலையாரும் சோழர் படைகட்கு அங்கங்கே ஊக்கமும், உணர்ச்சியும் ஊட்டிவந்தார். சோழ நாட்டுப் படைகள் எல்லாம் பேரூக்கத்துடன் போருக்கு எழுந்தன.

மாற்றார் படையில் பதினொரு வேளிரும், சேரரும், பாண்டியரும் சேர்ந்து எதிர்த்தனர். ஆனால் சோழர் படைக்குத் தனிமையாகத் தலைமை தாங்கினான் கரிகாலன்! இருபடைகளும் **வெண்ணி** என்னும் ஊரில் சந்தித்துப் போர் செய்தன. சோழ சரித்திரத்திலேயே நிகழ்ந்த சிறந்த போர்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது **வெண்ணிப் போர்.** கரிகாலன் ஆண்டில் இளையவனானாலும் வீரத்தில் சிறந்திருந்தான். சோழ நாட்டு மக்களின் ஆதரவும் போர் வீரர்களின் நாட்டுப் பற்றும் கரிகாலனுக்கு மேலும் ஊக்கத்தை ஊட்டின.

மாற்ருர் படையோ அளவில் பெரியதாய் இருந்தது. ஆனுல் வெவ்வேறு தலைவரின் கீழ் போரிட்டது. வேளிர்களின் கீழிருந்த படைவீரர்கள் எல்லாம் வெறும் கூலிப் படைஞரே ஆவர். நாட்டுப்பற்றும் உயர்ந்த குறிக்கோளும் அற்றவர்கள். இந்நிலையில் சோழ நாட்டில் போர் நடப்பதால் யார் தலைவர், யார் தமது கட்சியினர் என்று அவர்களுக்கே விளங்கவில்லை; மேலும் வேளிர்கள் சோழ நாட்டில் தம் படைகட்கும், சோழ பாண்டியர் படைகட்கும் மறைமுகமாகச் சோழ நாட்டில் பேராதரவும் உணவும் கிடைக்கும் என்று எதிர்பார்த்தனர். ஆனுல் அவர்கள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. ஏன்? கரிகாலனை அந்நாட்டு மக்கள் யாவரும் தங்கள் கடவுளைப் போலவே மதித்தனர்.

இந்நிலையில் கரிகாலன் ஒரு பெரிய யானையின் மேல் ஏறிக் கொண்டு இளம் கதிரவன் எழுதல் போலப் போர்முகத்திற்கு வந்தான். அவன் போர் முகத்திற்கு வந்ததைச் செவியுற்ற ஆண்மையுள்ள மக்கள் யாவரும் போருக் கெழுந்தனர்.

தீவிரமாகப் போர் நடந்தது. வேளிர் படையில் குழப்பமும் தளர்ச்சியும் ஏற்பட்டன. இதை அறிந்த கரிகாலன் தந்திரமாக வேளிர் படையினுள் புகுந்து தாக்கினுன். வேளிர் படைவீரர்கள் வரிசை வரிசையாகப் பின்வாங்கத் தொடங்கினர். சிலர் சோழர் படைகட்கு இறையாயினர். பதினெரு

வேளிரும் ஓடத் தலைப்பட்டனர். அவருள் பலர் மாய்ந்தனர்.

வேளிரிடத்திலே வெற்றி கொண்ட கரிகாலன் பாண்டியனைத் தாக்கினான். இத்தகைய நிலையில் சோழர் தளபதிகளில் பலர் சேரருடன் பொருதனர். வெற்றி தோல்வி யாருக்கு என்று அறியமுடியாத நிலையில் இருந்தது. ஆனால் கரிகாலனோ, பாண்டியனை எதிர்ப்பதில் முனைந்திருந்தான். பாண்டியர் படையும், தளர்ச்சி கொண்டு ஓடலாயிற்று; **பாண்டியன் தோற்றான்.**

இவ்வெற்றியோடு கரிகாலன், கடுமையாகப் போர் செய்துகொண்டிருந்த பெருஞ் சேரலாதனிடம் திரும்பினான். கரிகாலன் புரிவதோ கன்னிப் போர். எதிர்த்து நிற்கும் சேரலாதன், படைவலியும் போர் உணர்ச்சியும் மிக்கவன். கரிகாலனுக்கோ, இணையற்ற ஊக்கமும், அறிவும், ஆற்றலும், படைவீரர்களின் அன்பும் துணைசெய்தன. கரிகாலனும், சேரலாதனும் நேருக்கு நேர் போர் செய்தனர்.

சோழர் தளபதியும், சான்றோரும், தன் வேந்தனுக்கு யாதாகுமோ? என்று அஞ்சினர். ஆனால் கரிகாலன் விட்ட கணை சேரலாதன் மார்பிலே பாய்ந்தது. வேளிர்கள் பேச்சைக் கேட்டுப் போரில் இறங்கிய சேரலாதன் வீழ்ந்தனன். போர் நின்றது. அவனைச் சேரவீரர்கள் வஞ்சிமா நகரத்திற்கு

எடுத்துச் சென்றனர் வெண்ணிப் போரின் வெற்றி, கரிகாலனுக்கே கிட்டியது.

சேரலாதன் மார்பிலே பட்ட கணை, அவன், முதுகிலும் ஊடுருவிச் சென்றது. இப்புறப்புண் பட்டதைப் பொறாத சேரலாதன் வடக்கிருந்து உயிர் நீத்தான்.

கன்னிப் போரில், வெண்ணியில் வெற்றி பெற்ற கரிகாலன் புகழ் நாடெங்கும் பரவியது.

இமய வெற்றி :

வெண்ணியில் வெற்றி பெற்ற கரிகாலனிடத்தில் குடிமக்கட்குப் பேரன்பு ஏற்பட்டது. இவ்வன்பின் துணைகொண்டு எத்தகைய பகைவர்களையும் எதிர்க்கலாம் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டது.

பகைவர்களும் தங்கள் சூழ்ச்சியை நிறுத்தவில்லை. மீண்டும் சோழர் பூபதியை எப்படியும் ஒழிக்கலாம் என்று காலம் கருதியிருந்த ஒன்பது வேளிர்கள், சோழ அரசனை எதிர்க்கத் தலைப்பட்டனர். கடுமையான வெண்ணிப் போரில் வெற்றி பெற்ற கரிகாலனுடைய படைகள் சளைத்திருக்கக் கூடும் என்று நினைத்து அவர்கள் போருக்கு எழுந்தனர்.

ஒன்பது குறுநில மன்னர்களும் சேர்ந்து வாகை என்னும் இடத்தில் கரிகாலனை எதிர்த்தனர்.

இதற்கு அஞ்சுபவன் கரிகாலனு! சோழர்படை வீரர்கள் மிக்க ஊக்கத்துடன் போர் செய்தனர். சோழனை எதிர்த்த பகைவர் படைகள் சிறிது சளைத்தன. வெண்ணியில் வெற்றி பெற்ற வளவன் **வாகையில்** வெற்றி பெற்று **வாகை** சூடினுன். எதிர்த்த குறுநில மன்னர்களில் சிலர் மாய்ந்தனர்; எஞ்சியவர் ஓடி ஒளிந்தனர்.

இரண்டு முறை வெற்றி பெற்ற கரிகாலனுக்கு நாட்டை அமைதியாக ஆளவேண்டும் என்ற எண் ணம் உண்டாயிற்று. ஆனுல் அடுத்தடுத்துப் பகை வர் தோன்றினுல் மீண்டும் போருக்கெழ வேண் டுமே? சோழநாட்டின் வளப்பத்தைப் பெருக்க வேண்டும் என்று அவன் கொண்ட எண்ணத்திற்குப் போர் செய்தல் என்பது, பெருந்தடையாக இருப் பதாக அவன் கருதினுன். போர் எழாமல் இருப் பதற்கு ஒரு முடிவு செய்யவேண்டும் என்று நினைத் தான்.

ஆங்காங்கே சில வேளிர்கள் மறைமுகமாகச் சூழ்ச்சியும், கலகமும் செய்து வருகின்ருர்கள் என் பதை அறிந்தான் கரிகாலன். அவ்வாறு கலகம் செய்து வந்த **நாகர், ஒளியர், எயினர்** என்ற கூட்டத் தினரை அடக்கினுன். பாண்டியரும் சேரரும் மறு படியும் பொர எழக்கூடும் என்று நினைத்த அவன், அவர்களைத் தன்னுடைய ஆட்சிக்கு உட்பட்டவர் களாக ஆக்கிக்கொண்டான். மேலும், மேலும்

வெற்றி பெற்ற கரிகாலனுக்குப் போரிலே பெருக்கம் ஏற்பட்டது ; அவனுடைய படைகளோ கணக்கற்றவையாக ஆயின.

இத்தகைய நிலையில் தமிழ் நாட்டில் வலிமையும், வெற்றியையும், தேடிக்கொண்ட இவனுக்கு வடநாட்டிற்குச் செல்லவேண்டும் என்ற அவா ஏற்பட்டது. வடநாடு செல்லும்போது தன்னை எதிர்த்தவர்களைத் தன் படைவன்மையால் அடக்கியும், நட்புப் பூண்டவர்களை ஏற்றும் வரலாம் என்று உறுதிகொண்டான். அமைச்சர்கள், சான்றோர்கள், படைத் தலைவர்கள் முதலியவர்களைக்கொண்டு ஆலோசித்தான். யாவரும் பெருமகிழ்ச்சியுடன் அவன் கூற்றுக்களை ஆமோதித்தனர்.

அமைச்சர்களும் ஏனையோரும் தன்னுடைய கருத்திற்கு உடன்பட்டதை அறிந்த வளவன் காலக் கணிதரை நோக்கி வடநாடு புறப்படுவதற்குரிய நன்னாளைக் கூறுமாறு கேட்டான். காலக் கணிதரும் வேந்தன் வடநாடு செல்லுவதற்குரிய நல்ல நாளை எடுத்துக் கூறினர். அவர்கள் குறித்த நன்னாளில் கரிகாலனுடைய நாற்படைகளும் புறப்பட்டன. சான்றோர்களும், அமைச்சர்களும் புடைசூழ கரிகாலன் புறப்பட்டனன். தங்கு தடையின்றிப் படைகள் சென்றன. படைகள் தமிழ் நாட்டின் எல்லையைக் கடந்தன. அவை வட எல்லையாகிய இமயத்தை நோக்கியே சென்றன. கரிகாலனும் இமயம் வரை

சென்று, அப்பகுதிகளிலும் தன் ஆணையைச் செலுத்த நினைத்தான். கரிகாலன் இமயத்தை நோக்கிச் செல்லும் பொழுது ஒருவரும் அவனை எதிர்க்கவில்லை. ஆனால் அவனுடைய புகழை அறிந்த பலர் அன்போடு அவனை உபசரித்து வரவேற்றனர்.

அவ்வாறு செல்லும் பொழுது இமயப்படையெடுப்பு இமய யாத்திரையாக இருந்தது; பல நாடுகளைக் கடந்து இமயத்தை அடைந்தான். கைலையங் கடவுள் வீற்றிருக்கும் இமயத்தைக் கண்டவுடன், அவன் கொண்ட பெருமகிழ்ச்சிக்கு எல்லை இல்லை.

இமயமலைப் பகுதிக்குச் சென்றவுடன் அங்குக் கரிகாலன், தன் புலிக்கொடியை நாட்டினான். எப்பொழுதும் நிலைத்திருக்கும் பொருட்டு அப்பகுதிகளில் புலிக்கொடியின் உருவங்களைக் கல்லிலே பொறிக்கச் செய்தான். அவன் முன்னோர்கள் எவரும் செய்யாத அக்காரியத்தை முடித்து அழியாப் புகழைத் தேடிக்கொண்டான். கரிகாலன் சென்று புலிபொறித்த இடம் சிக்கிம், **புட்டான்** என்ற இராச்சியங்கட்கு இடையில் உள்ள மலைப்பகுதியேயாகும், என்று சான்றோர் கூறுவர். அப்பகுதிகளில் **சோழ மலைத்தொடர், சோழர் கணவாய்** என்ற பெயர் வழங்கி வருவதாகவும் கூறுவர்.

இமயத்தில் புலிபொறித்த மகிழ்ச்சியுடன் கரி

காலன் மீண்டும் தமிழ் நாட்டிற்குத் திரும்பினன்.
கரிகாலன் இமயம் வரை சென்றபோது எதிர்க்காத
அப்பக்கங்களில் உள்ள சில மன்னர்கள் அவன் இம
யத்தில் புலியைப் பொறித்ததில் மிகுந்த அழுக்கா
றும், சினமும் கொண்டு அவனை எதிர்க்க வந்தனர்.
முதலில் அவனை வச்சிர நாட்டு மன்னன் எதிர்த்
தான். வச்சிர நாடு என்பது இப்போது பண்டில்கண்டு
என வழங்கும் பகுதியேயாகும் என்று கூறுவர்.
வளவன் வச்சிர வேந்தனை வென்றனன்; அவ் வேந்
தன் தன்னுடைய தோல்விக்கு அறிகுறியாக,
காவிரிப்பூம் பட்டினத்தில் முத்தினல் பந்தல்
அமைத்துக் கொடுப்பதாக வாக்களித்தான். வச்சிர
நாட்டைக்கடந்து செல்லும்பொழுது மகத நாட்டு
வேந்தன் சோழனை எதிர்த்தான்; அவனும் தோற்ற
னன். அம்மன்னன் காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு
பட்டிமண்டபம் அமைத்துக் கொடுப்பதாக உறுதி
கூறினன்.

இவ்வெற்றிகளைக் கண்ட இடைப்பட்ட நாடு
களில் உள்ள வேந்தர்கள் வளவனை எதிர்க்க அஞ்சி
னர். அன்புடன் உபசரித்து அனுப்பினர். அவந்தி
மன்னன் வளவன் தன் நாட்டிற்கு வந்தபோது
மிகவும் உபசரித்தான். கரிகாலனும் அவனிடத்து
நட்புப் பூண்டனன். அவந்தி அரசன் தன் நட்பிற்கு
அறிகுறியாக காவிரிப்பூம்பட்டினத்தில் தோரண
வாயில் அமைத்துக் கொடுப்பதாக உடன்பட்டான்.

அத்தகைய பெருஞ்சிறப்புகளைப் பெற்ற கரி

காலன் காவிரிப்பூம் பட்டினத்தை வந்து அடைந்தான்; சான்றோரும் குடிமக்களும், கரிகாலனைப் பெருமகிழ்ச்சி கொண்டு வரவேற்றனர்.

வச்சிர வேந்தன் வாக்களித்தபடி காவிரிம்பூம் பட்டினத்தில் அரண்மனையில், முத்துப் பந்தலை அமைத்துக் கொடுத்தான். முறைப்படி மகத மன்னன் தான் அளித்த வாக்குப்படிச் சிறந்த மண்டபத்தை அமைத்துக் கொடுத்தான். அம் மண்டபத்தில் புலவர்கள் கூடி ஆராய்ச்சி செய்தனர். அவந்தி வேந்தன் தான் கூறியபடி காவிரிப் பூம்பட்டினத்தின் முகப்பில் உயர்ந்த தோரண வாயிலை அமைக்கச் செய்தான். அந்நகரில் யார் வந்து நுழைந்தாலும் அவ்வழகு கண்ணைக் கவரும் நிலையில் அமைந்திருந்தது.

இவ்வாறு இமயம் வரையில் வெற்றி பெற்றுப் புகழுடன் விளங்கிய கரிகாலன் அரியணையில் அமர்ந்து நாட்டை வளப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டான்.

கரிகாலன் ஆட்சி : காவிரிக்குக் கரை எடுத்தலும் உறையூர்த் தோற்றமும்.

இமயம் வரையில் தன் ஆணையைச் செலுத்திய கரிகாலன் 'இனி நாட்டை அமைதியாக ஆள வேண்டும்' என்று எண்ணினான். நாட்டு நலனுக்குரிய ஆக்கங்களைச் செய்ய முயன்றான். சோழ நாட்டு வளத்தைப் பெருக்கும் முயற்சியில் ஈடுபட்டான்

நில வளத்திற்காகக் காவிரி நீரை ஒழுங்குபடுத்த நினைத்தான். அதற்குக் காவிரியின் இரு மருங்கிலும் கரை கட்டவேண்டுவது மிக இன்றியமையாதது, என்று கருதி, அவ்வேலையில் ஈடுபட்டான். சோழ நாட்டின் மேற்குப் பகுதிகளில் உள்ள காவிரியாற்றுப் பகுதிக்கும் கரை கட்டத் தீர்மானித்தான்.

கரிகாலன் ஆங்காங்குள்ள மன்னர்கட்குத் தன் விருப்பத்தைத் தெரிவித்தான்; கரை கட்டுவதற்குச் சோழ நாட்டிலிருந்தும் தொழிலாளர்களை அனுப்புவதாகத் தெரிவித்தான். பல அரசர்கள் கரிகாலன் விருப்பத்திற்கிணங்கிக் காவிரிக்குக் கரை கட்டும் பணியில் ஈடுபட்டனர்.

பல மன்னர்கள் இப்பணியில் ஈடுபட்டு ஒத்துழைத்தனர். ஆனால் ஒரு வேந்தன் மட்டும் இப்பணியில் ஈடுபடவில்லை. உருத்திரன் என்னும் அம்மன்னன் கரிகாலனது வார்த்தைகளைப் பொருட்படுத்தவில்லை. அவன், தான் உருத்திர மூர்த்தியின் வழி வந்தவன் என்று, தன்னைப் பெருமையாகப் பேசிக்கொள்பவன். அதற்கு அறிகுறியாகத் தன் நெற்றியில் கண்ணைப் போன்ற ஒரு குறியை அணிந்திருப்பான். இச்செயல் அம்மரபினரது வழக்கமாய் இருந்தது.

உருத்திரன் காவிரியின் பணியில் ஈடுபடாததைக் கேள்வியுற்ற கரிகாலனுக்கு கடுஞ் சினம்

எழுந்தது. அவனை அடக்குதல் மிக எளிமையான காரியம் என்று கருதிய கரிகாலன், ஓர் ஓவியனை வரவழைத்து உருத்திரனைப்போல ஒரு படம் எழுதச் சொன்னான். ஓவியன் கரிகாலன் கருதியபடி படத்தை எழுதி அப்படத்தில் ஓர் நெற்றிக் கண்ணையும் அமைத்தான். கரிகாலன் படத்தை இடது கையால் எடுத்து நெற்றிக் கண் வரைந்த இடத்தை வேலால் குத்தினான். நெற்றிக் கண் குத்தப்பட்ட அப்படத்தை உடனே அரசன் உருத்திரனிடத்து அனுப்பினான். உருத்திரன் முதலில் அப்படத்தைப் பார்த்து அதன் அழகில் ஈடுபட்டான். ஆனால் நெற்றிக் கண் குத்தப்பட்டிருப்பதைப் பார்த்த உருத்திரன், இது கரிகாலன் தனக்குக் கொடுத்த எச்சரிக்கை என்றும், தான் கரைகட்டும் வேலையில் ஈடுபடாவிட்டால் தனக்கும், படத்திற்கு நேர்ந்த கதி நேரும் என்றும் உணர்ந்தான். உடனே அவனும் சென்று அப்பணியில் ஈடுபட்டான். காவிரிக்குக் கரிகாலனுடைய ஆணையால் ஒழுங்கான கரை கட்டியமைக்கப்பட்டது. இதனால் சோழ நாட்டின் வளம் பெருகும் என்ற நம்பிக்கை குடிமக்கட்கு ஏற்பட்டது. இருமருங்கும் கரைகளுடன் காவிரி பொலிவுடன் திகழ்ந்தது.

**கரிகாலன் உறையூர் கண்டது :**

கரை கட்டப்பட்ட காவிரி முழுமையும் கண்ணால் காண விழைந்தனன் கரிகாலன்; தன்னுடைய

பட்டத்து யானையின் மீதேறிப் புறப்பட்டான். காவிரியின் அழகினைப் பார்த்துக்கொண்டே வந்த கரிகாலனுக்குச் சோழ நாட்டுக் குடிமக்களின் அன்பைக்காணவும் வாய்ப்புக் கிடைத்தது. அவன் செல்லும்போது மக்கள் யாவரும் பேரன்புடன் அவனைவரவேற்றனர். அந்த அந்த ஊர் மக்கள் தமது வயல்களில் பெருகப் போகும் வளப்பத்தை நினைத்து மகிழ்ச்சியும், ஊக்கமும் கொண்டனர்.

கரிகாலன் இரு கரைகளின் தோற்றத்தையும், தன் நாட்டு மக்களின் மகிழ்ச்சியையும் கண்டு களித்தான். ஆண்டவன் திருவருளை நினைத்து ஒவ்வொரு ஊராகத் தாண்டிச் சென்றான். திருச்சிராப்பள்ளி வந்து தாயுமானவரை வணங்கி, திருவரங்கம், திருவானைக்கா முதலிய தலங்களுக்குச் சென்று, ஆங்காங்கே எழுந்தருளி இருக்கும் ஆண்டவனை வழிபட்டுப் பட்டத்து யானைமேலேறிமேற்குத் திசையை நோக்கிச் சென்றான்.

மேற்குத் திக்கு நோக்கிக் கரிகாலன் செல்லும் போது, ஓரிடத்தில் ஒரு பெரிய கோழி ஓடிவந்து இவன் ஊர்ந்து வந்த பட்டத்து யானையின் காலில் கொத்தியது. பட்டத்து யானை அங்கே நின்றது. அக்கோழியின் செயலைக் கண்டு பட்டத்து யானையே சிறிது அஞ்சியது. பின்னரும் மிகுந்த சினத்தோடு அக்கோழி அந்த யானையின் காலைக் கொத்தியது.

அதைக் கண்ட கரிகாலன் சற்று மருண்டான்; கோழியை அடிக்க முயன்ற காவலர்களைத் தடுத்தான். அக்கோழியும் மறைந்து விட்டது.

இந்நிகழ்ச்சியைக் கண்ட கரிகாலனது உள்ளத்தில் சிறிது கலக்கம் ஏற்பட்டது. பட்டத்து யானையினின்றும் கீழே இறங்கினான். அரும்பெரும் போர்களில் வெற்றிபெற்ற இப் பட்டத்து யானை ஒரு கோழியின் கொத்தலுக்கு அஞ்சியதைக் கண்ட கரிகாலன் கலக்கமுற்றான். '' சிறு கோழி அச்சமின்றி மக்கள் சூழ்ந்த இத்துணைக் கூட்டத்தினிடையே வந்து யானையைக் கொத்தியது ; இந்தக் கோழிக்கே இத்துணை உரம் இருந்தால் இங்குள்ள மக்கள் எப்படி இருப்பார்கள் ! இந்த நிலத்தில் ஏதோ தனிப் பெருமை இருக்கிறது '' என்று கரிகாலன் கருதினான். உடனே காவலர்களைக் கொண்டு அருகில் ஏதேனும் ஊர் இருக்கிறதா என்று பார்க்கச் சொன்னான். அருகில் உறையூர் என்னும் ஊர் இருப்பதாக அவர்கள் கூறினர். '' கோழியால் தடுக்கப்பட்ட அவ்வூர் வீரம் செறிந்தது. கோழி நம்மைத் தடுத்தது ஆண்டவன் செயலே ஆகும்; இவ்விடத்தை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும், '' என்று கூறினான்.

வாணிபம் முதலியவற்றிற்குக் கடற்கரை நகரம் சிறப்பாயிருப்பினும், உள் நாட்டில் ஒரு சிறந்த நகரம் அமைத்துக் கோட்டை கொத்தளங்

களைக் கட்டவேண்டும் என்று முன்பே அவன் கருதி யிருந்தான். ''இறைவன் கோழியின் வாயிலாக இவ்விடத்தைப் பெரு நகரமாக்கக் காட்டியருளி இருக்கிறான்'' என்று கருதிய கரிகாலன், இதுகாறும் சில மக்களே தங்கும் இச்சிற்றூர் இனி மன்னவன் உறையும் பேரூராக இருக்க வேண்டும், என உறுதி பூண்டனன். மேலும் பார்க்க வேண்டிய இடங்களைப் பார்த்துவிட்டுக் காவிரிப்பூம்பட்டினம் சென்றான்.

கரிகாலன் உறையூரைப் பெரு நகரமாக்கும் பணியில் ஈடுபட்டான். தான் நினைத்த திட்டத்தைச் செய்து முடித்தான்; மாட மாளிகை, கூட கோபுரங்கள், அழகிய முடுக்குகள் கொண்ட பெரு நகரமாயிற்று உறையூர்; அரசன் தங்குதற்கு எழிலமைந்த கட்டடத்தையும் கட்டி முடித்தனர். கடற்கரை நகரமாகிய காவிரிப் பூம்பட்டினத்தின் எழிலில் சிறிதும் குறையாத உறையூரில் ஒரு பெரிய சிவாலயத்தை எழுப்பினான் கரிகாலன். ஒரு நல்ல நாளில் ஆண்டவனை வணங்கிவிட்டுப் புதிதாக அமைத்த அரண்மனைக்குள் குடிபுகுந்தான். கோழியால் குறிக்கப்பட்ட இடத்தில் அந்நகர் எழுந்த காரணத்தால் அந்நகர்க்குக் கோழி என்னும் பெயரமைந்ததாகக் கூறுவர். யானை கோழியின் மூக்கினால் தடைப்பட்ட காரணத்தால் அவ்வூர்ச் சிவாலயம் மூக்கீச்சுரம் என்று பெயர்பெற்றது. பெரும் பகைவர்களை வென்று, காவிரிக்குக் கரை அமைத்து உறையூரை நிறுவிச் சோழ நாட்டின் சிறப்பை

நாடெங்கும் போற்றுமாறு செய்த கரிகாலன், தன் தந்தை, அழுந்தூர் வேள்மகளை மணம் செய்து கொண்டது போல, சீர்காழிக்கு அருகில் நாங்கூர் என்னும் ஊரிலுள்ள சிறந்த வேளாளர் குலச் செல்வருடைய மகளை மணம் செய்து கொண்டு, குடிமக்கள் உள்ளக்கோயிலில் உறைபவனாக இருந்து ஆட்சி செலுத்தி வந்தான்.

கவிஞர் உள்ளத்தில் கரிகாலன் :

நாட்டு நலம் கண்ட கரிகாலன் புலவர் நா நலங் காண விழைந்தான். கலைச் செல்வத்தை நாட்டில் வளர்க்க உறுதி பூண்டனன். காவிரிப் பூம்பட்டினத்தில் அமைந்த பட்டி மண்டபத்தில் புலவர்கள் கூடித் தமிழ் ஆராய்ச்சி செய்தனர். இப்பட்டி மண்டபம் மதுரையில் அமைந்த தமிழ்ச் சங்கத்தைப் போன்றே விளங்கியது.

ஒரு நாள் கரிகாலனிடம் தாமக்கண்ணி என்னும் பெண்பாற் புலவர் வந்தார். அப்புலவருடைய கால் முடமாக இருந்ததால் அவரை **முடத் தாமக் கண்ணியார்** என்று அழைத்தனர். அப்புலவருக்குக் கால் முடமாக இருந்தாலும், அறிவு நிரம்பியிருந்தது. அரசன் அவரை வரவேற்று உபசரித்தான். தாமக் கண்ணியார் சில காலம் அங்கே தங்கி இருந்தனர். அப்போது அங்குள்ள புலவர்களோடு அளவளாவினர், தாமக் கண்ணியார் சோழ நாட்டில்

பல ஊர்களுக்குச் சென்று வந்தனர். சோழ நாட்டு வளப்பங்களைக் கண்டுணர்ந்தவர். அவ்வளப்பங் களையெல்லாம் வைத்து ஒரு பெரிய கவியாகப் பாட வேண்டுமென்று நினைத்தார். அக்கவியில் வேறு யாருக்கோ சொல்வது போல வளவன் சிறப்பை வெளிப்படுத்த நினைத்தார் அப்புலவர்.

தமிழில் ஒருவனுடைய புகழை வெளிப்படுத்தப் பல வழிகள் உள்ளன. ஒரு சிறந்த வள்ளலிடம் பரிசு பெற்ற ஒரு புலவர், பரிசில்.பெறும் பொருட்டு அலையும் மற்ற புலவர்களைப் பார்த்து, "நீங்கள் இன்னாரிடம் போனால் சிறந்த பரிசில் கிடைக்கும்" என்று சொல்லி அவ்வள்ளலிடம் செல்லுதற்கு வழி காட்டுவதாகச் சில புலவர்கள் நூல்களில் பாடியிருக்கிறார்கள். அவ்வகையான நூலுக்கு **ஆற்றுப்படை** என்று பெயர். பரிசிலைப் பெற விரும்புவோர், புலவர், பொருநர், பாணர், விறலியர் என்று பல வகைப்படுவர். இவர்களில் யாரைப்பார்த்துக் கூறுவதாகப் பாட்டு அமை கிறதோ அவர்கள் பெயரால் நூல் அமையும். புலவராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொரு நராற்றுப்படை, விறலியாற்றுப்படை என்பன அவற்றிற்கு எடுத்துக் காட்டுக்கள்.

முடத்தாமக் கண்ணியார் பொருநராற்றுப் படை பாடி அதில் கரிகால் வளவனுடைய புகழைப் பதித்து வைக்கலாம் என்று கருதினர். பொருநர்

என்பவர்கள் கையில் தடாரி என்ற பறையை வைத்துப் பாடி வருவார்கள். கரிகாலனிடம் பரிசில் பெற்று வந்த ஒரு பொருநன், வறுமையால் உழன்று யாரேனும் வள்ளலைக் கண்டு பரிசில் பெறலாம் என்று சென்று கொண்டிருக்கும் மற்றொரு பொருநனைப் பார்த்து, அவனைக் கரிகாலனிடத்தில் வழி காட்டி அனுப்புவதாக இச்செய்யுள் அமைந்திருக்கிறது.

ஒரு பொருநன் திருவிழாவிற்குச் சென்றிருந்தான். அவனோடு வந்த ஒரு விறலி யாழ் வாசிக்க, இவன் பறை கொட்டினான். நான்கைந்து நாட்கள் விழாக்கள் நடந்தன. அப்பொழுது அவர்கள் வயிறாரச் சாப்பிட்டார்கள். விழா முடிந்தது. அவர்கள் அவ்வூரை விட்டுப் புறப்பட்டார்கள்; பல நாட்கள் நடந்து சென்றமையாலும் போதிய அளவு உணவு கிடைக்காமையினாலும் உடல் மெலிந்தனர். அவர்கள் ஒரு காட்டினிடையே வந்து சேர்ந்தார்கள். கோடை வெய்யிலின் மிகுதியால் மரங்களெல்லாம் வாடிப் பாலை போல் காட்சியளித்தது அவ்வடவி. அக்காட்டில் சில இலைகளையே கொண்ட ஒரு மரத்தினடியில் அவர்கள் தங்கியிருந்தனர். மரத்தின் கீழ் அடர்ந்த நிழல் காணப்படவில்லை. அந்த இடமாவது கிடைத்ததே என்ற ஆறுதலுடன் பொருநனும், அந்தப் பரிவாரமும் அங்கு அமர்ந்தனர்.

அளிக்கப்பட்ட விருந்தினை உண்டு, சிறந்த பரிசில் பெற்ற பொருநன் ஒருவன் அங்கே வந்தான். பரிசில் பெற்றுவந்த பொருநன், பசியால் வாடிய சுற்றத் தாருடன் உட்கார்ந்திருக்கும் மற்றொரு பொருநனைப் பார்த்தான். அவர்கள் நிலைமையைக்கண்டு இரங்கினன்; பரிசில் 'பெற்று வந்த செல்வப் பொருநன், இவர் களைக் கரிகாலனிடம் அனுப்பினுல் இவர்கள் வறுமை நீங்குமே எனக் கருதினன்; உடனே அப்பொருநனை அழைத்து, "நான் உங்களைக் கண்டது, நீங்கள் ஆற்றிய தவப் பயனே" என்று கூறினன். உடனே அவ்வறுமையால் உழன்ற பொருநன் தன் சுற்றத்தாருடன் எழுந்து நின்று, அச்செல்வப் பொருநனுக்கு மரியாதை செய்தான். அவர்கள் செயலைக் கண்டுவந்த பொருநன் புன்னகை கொண்டு கூறலுற்றான், "பொருநரே! யானும் உங்கள் இனத் தைச் சேர்ந்தவன். இப்போது என் நிலையைக் கண்டு மருண்டு விட்டீர்கள். உங்களைப் போலவே நானும் பசியாலும், வறுமையாலும் வாடியவன். ஆனல் கரிகால் வளவனைக் கண்டேன். என் வறுமை நீங் கியது. எப்பொழுதும் திறந்திருக்கும் அவன் அரண் மனை வாயிலில், புலவரும், பொருநரும், இரவலரும் சென்றால் தடையின்றி உள்ளே செல்லலாம். அத்தகைய சிறந்த அரண்மனை வாயிலை, நான் அடைந்தேன். பலநாள் பட்டினி கிடந்தமையால் என் உடல் மெலிந்திருந்தது. விடியற்காலையில் அங்குச் சென்ற யான் தடாரியைக் கொட்டினேன்.

கரிகால் வளவனே யானிருந்த இடத்திற்கு வந்து உறவினனைக் காண்பதுபோல கண்டான்.

அவ்வள்ளல் பார்த்த பார்வை என் உள்ளத்தில் தண்மையை ஏற்படுத்தியது. என்னுடன் பேரன் போடு பேசத்தொடங்கினான்; என்னுடைய பழைய ஆடைகளைக் களைந்தெறியச் சொன்னான்; அழகிய புதிய ஆடையை எனக்கு அளித்து அணியச் செய் தான். அழகிய மகளிர் எனக்கு இனிய பானங்களைப் பொற்கிண்ணத்திலே ஊற்றித் தந்தனர்; யான் அவற்றைப்பருகி இளைப்பாறினேன். அப்பொழுது நான் கண்டதெல்லாம் கனவோ நனவோ என்று ஐயுற்றேன். அப்பொழுதப்பொழுது எனக்கு வித விதமான உணவுகள் அளிக்கப்பட்டன; யான் அவற்றை உண்டேன். இவ்வாறு பல நாட்கள் விருந்துண்டு மகிழ்ச்சியுடன் காலங் கழித்த பின், நான் என்னுடைய ஊருக்குப்போகக் கரிகாலனிடம் விடைபெற நினைத்தேன். ஆனால் அவ்வள்ளலுக்கு என்னை அனுப்புவதில் பிரியமில்லை. இருப்பினும் எனது உள்ளக் கிடக்கையை அறிந்த அவன் எனக்கு யானை முதலிய பரிசில்களை அளித்து பிரியா விடை கூறி அனுப்பினன்'' என்று செல்வப் பொருநன் கூறினன்.

அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த வறுமைப் பொருநன் ''கரிகாலன் செல்வத்தில் சிறந்த வள்ளலோ?'' என்று கேட்டனன்.

கரிகால் வளவனே யானிருந்த இடத்திற்கு வந்து உறவினனைக் காண்பதுபோல கண்டான்.

அவ்வள்ளல் பார்த்த பார்வை என் உள்ளத்தில் தண்மையை ஏற்படுத்தியது. என்னுடன் பேரன் போடு பேசத்தொடங்கினான்; என்னுடைய பழைய ஆடைகளைக் களைந்தெறியச் சொன்னான்; அழகிய புதிய ஆடையை எனக்கு அளித்து அணியச் செய்தான். அழகிய மகளிர் எனக்கு இனிய பானங்களைப் பொற்கிண்ணத்திலே ஊற்றித் தந்தனர்; யான் அவற்றைப்பருகி இளைப்பாறினேன். அப்பொழுது நான் கண்டதெல்லாம் கனவோ நனவோ என்று ஐயுற்றேன். அப்பொழுதப்பொழுது எனக்கு வித விதமான உணவுகள் அளிக்கப்பட்டன; யான் அவற்றை உண்டேன். இவ்வாறு பல நாட்கள் விருந்துண்டு மகிழ்ச்சியுடன் காலங் கழித்த பின், நான் என்னுடைய ஊருக்குப்போகக் கரிகாலனிடம் விடைபெற நினைத்தேன். ஆனால் அவ்வள்ளலுக்கு என்னை அனுப்புவதில் பிரியமில்லை. இருப்பினும் எனது உள்ளக் கிடக்கையை அறிந்த அவன் எனக்கு யானை முதலிய பரிசில்களை அளித்து பிரியா விடை கூறி அனுப்பினன்'' என்று செல்வப் பொருநன் கூறினன்.

அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த வறுமைப் பொருநன் ''கரிகாலன் செல்வத்தில் சிறந்த வள்ளலோ?'' என்று கேட்டனன்.

நிலப் பகுதிகளில் அவ்வாறு சேமித்து வைக்கப்பட்ட நெற்கூடுகள் ஏராளமாகக் காணப்படும். தென்னந் தோப்புகள் அங்கங்கே மிகுதியாக இருக்கும். அங்கே பல குடிமக்கள் வாழ்கின்றார்கள்; உழவர் களுடைய பெண்கள் மணலைக் குவித்து விளையாடு கின்றார்கள். மயில்கள் பலாப் பழங்களையும், பாகற் பழங்களையும் கொத்தித் தின்னும். அப்போது ஆண் மயில்கள் அம் மணற் பரப்பில் ஆடுகின்றன. அண்மையில் உள்ள செடிகளில் வண்டுகள் முரலும் ரீங்காரம் யாழோசை போன்றிருக்கும். அத்தகைய வயல்கள் நிரம்பிய மருத நிலம் நெல்லும் கரும்பும் ஏராளமாக விளையப்பெற்றிருக்கும். நெல்லை அரியும் ஓசையும், கரும்பை வெட்டும் ஓசையும் ஒரே ஆரவாரமாக இருக்கும். மேட்டுப் பிரதேசங் களில் பகன்றைக் கொடிகள் படர்ந்திருக்கும்.

காடும், காடு சார்ந்த இடமுமாகிய முல்லை நிலம் ஒரு பக்கத்தில் பரந்திருக்கும். அங்கே முல்லைக் கொடிகள் படர்ந்திருக்கின்றன. சிவந்த மலருடன் செங்காந்தள் விளங்குகின்றது. தேற்று, கொன்றை முதலிய மரங்கள் மிகுதியாகத் திகழ்கின்றன; காயாமரம் நீலமணியைப் போன்ற மலரைப் பூத் துத் திகழ்கின்றது.

நாரைகள் கடற்கரைப் பக்கத்தில் இருால் மீன் களைக் கொத்தித் தின்கின்றன. அங்குள்ள புன்னை மரங்களில் அந் நாரைகள் தங்கியிருக்கின்றன.

மிகுந்த காய்களைக் கொண்ட தென்னை, வாழை முதலிய மரங்கள் ஏராளமாகக் காட்சியளிக்கும். மலைப் பக்கத்தில் வாழும் மக்கள் கடற்கரைப் பக்கத்திற்குச் சென்று, தங்கள் நிலத்தில் விளைந்த தேனையும் கிழங்கையும் விற்றுவிட்டு, அந்நிலத்தில் கிடைக்கும் மீனையும் நெய்யையும் வாங்கி வருவர். இவ்வாறு ஒரு நிலத்தில் வாழும் மக்கள் வேறு நிலத்திற்குச் சென்று தங்கள் நிலத்தில் விளையும் பொருள்களை விற்றுவிட்டு, அவற்றிற்கு மாற்றாக அந்நிலத்தில் விற்கும் பொருள்களை வாங்கி வருவர்.

குறிஞ்சி நிலத்தில் உள்ள மக்கள் அங்கு மலரும் குறிஞ்சிப்பூவைத் தலையில் சூடி மகிழ்வர். முல்லை நிலப் பகுதிகளில் வாழும் கோழிகள் அருகில் உள்ள மருத நிலத்திற்கு வந்து அங்குள்ள நெற்கதிரைத் தின்னும். அதுபோலவே மருதத்திலுள்ள கோழிகள் அருகில் உள்ள முல்லைப் பிரதேசத்திற்குச் சென்று அங்கே விளையும் தினைக் கதிர்களைத் தின்னும். மலையில் வாழும் மந்திகள் அருகில் உள்ள உப்பங் கழிகளில் மூழ்கி மகிழும். உப்பங் கழியில், திரியும் நாரைகள் அண்மையில் உள்ள மலைப் பகுதிகட்குப் போய் இளைப்பாறும். இத்தகைய நிலையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களின் தோற்றம் அழகிய முறையில் காட்சி அளிக்கின்றன.

காவிரி நதி பாய்வதால் சோழ நாடு மிகுந்த சிறப்பு எய்தி இருக்கின்றது. காவிரி பல நாடுகளில் பாய்கின்றது; ஆனால் சோழ நாட்டில்தான் முழுச் சிறப்பையும் பெறுகின்றது. கதிரவன் வெம்மையால் பசுமையான மரங்கள் வாடினாலும், மலைகளில் அருவி வரண்டாலும், மேகம் மழையைப் பெய்யாமல் பஞ்சம் படர்ந்தாலும், தவறாத நீர்வளத்தைப் பெருக்குவது காவிரி ஆறேயாகும்.

காவிரியின் நீர்ப்பெருக்கு கண்ணைக் கவரும் எழிலுடைக் காட்சியாய்த் திகழும். காவிரி மலைப் பகுதியினின்றும் வருவதால் மலையில் விளையும் பொருள்களைப் பெற்று ஈர்த்து வருகின்றது. நரந்தம் புல், அகில், சந்தனம், முதலியன காவிரி நீரில் மிதந்து வரும். அவற்றைக் காவிரி, கரையில் ஒதுக்கிச் செல்லும். காவிரி சோழ நாட்டில் உள்ள குளங்களிலும், மடுக்களிலும் நீரை நிரப்பிச் செல்லும். மகளிர் அம்மடுவிற் குடைந்து விளையாடுவார்கள். இப் புது வெள்ளத்தில் நெற்பயிர் மிகச் சிறப்பாக விளைகின்றது. காய்ந்து, முதிர்ந்து, வளைந்த நெற்கதிரை அரிவாளால் அறுத்துத் தொகுத்துக் கதிர்களை மலைபோலக் குவித்துப் பிறகு அவற்றைக் கடாவிட்டு நெல்லைக் குவியல் குவியலாய் அமைப்பர்; பின்பு அவற்றைக் குதிர்களிலே கொட்டி நிரப்புவார்கள். இவ்வாறு ஏராளமாக நெல் விளையும் பெருமையைப் பெற்றது அந்நாடு.

எல்லாம் சோழ நாட்டைக் காப்பாற்றும் காவிரியின் செல்வமன்றோ !

இவ்வாறு முடத்தாமக் கண்ணியார் சோழ வேந்தன் கரிகாலன் பெருமையையும், அந்நாட்டு வளப்பத்தையும் அழகாகக் கூறி 'பொருநர் ஆற்றுப்படை' என்னும் அரிய நூலைப் பாடி முடிக்கின்றார். இப்பாடலைக் கேட்ட கரிகால் வளவன் **நாட்டு வளம் பாடிய புலவர்** முடத்தாமக் கண்ணியாருக்கு ஏராளமான பரிசில்களை வழங்கினான். ஆங்குக் குழுமியிருந்த ஏனைய புலவர்களும், இவர் பாடலின் புலமை கண்டு பாராட்டினார்கள்.

சோழ நாட்டுப் பெருமையை முடத்தாமக் கண்ணியார் பாடியதேயன்றி **கடியலூர் உருத்திரங் கண்ணனார்** என்னும் பெரும் புலவர் பொன் கொழிக்கும் காவிரிப்பூம் பட்டினத்தின் பெருமை, சிறப்பு, செல்வமிகுதி வாணிகச் சிறப்பு ஆகியவற்றைப் "பட்டினப் பாலை" என்னும் நூலில் பாடிச் சிறப்பிக்கின்றார். அவருக்கும் கரிகாலன் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் அளித்ததாகக் கூறுவர். இத்தகைய புலவர்களால் பாடப்பெற்ற கரிகாலன் புகழ் என்றும் அழியாச் சிறப்புடன் திகழ்கின்றது.

# பாண்டியர் பூபதி

தமிழகத்தின் திலகமாய்த் திகழ்வது பாண்டி நன்னாடாகும். தொன்றுதொட்டுக் கடவுள் மண மும், கலைமணமும் திகழும் பெருமை அத்திரு நாட் டிற்கு உண்டு. வையையாறும், குமரித் துறையும் கோடை மலையும், குற்றால அருவியும் அப்பாண்டி நாட்டின் இயற்கை எழிலினை எடுத்துக் காட்டுவன ஆகும்.

**மதுரை** என்னும் திருநகரே பாண்டி நாட்டின் தலைநகராய்ப் பண்டைக் காலந்தொட்டுத் திகழ்ந் தது. ஆண்டவன் ஆடிய அறுபத்து நான்கு திரு விளையாடல்களையும் கொண்டது கூடல் எனப்படும் மதுரையன்றோ! முப்பெரும் சங்கம் நிறுவி முத் தமிழ் வளர்த்த பெருமை அத்திரு நகர்க்கே உண்டு. பாண்டி நாட்டின் பெருமையை, ஔவை பிராட்டி யார்,

"நல்லம்பர், நல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ்
இல்லம் தொறும் மூன்று எரியுடைத்து—நல்லரவம்
நாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டிய!
நின் நாடுடைத்து நல்ல தமிழ்."

என்று கூறியுள்ளார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த பாண்டிநாடு நீதி யில் தவறாத, வள்ளன்மையிற் சிறந்த வீரமிக்க வேந்

தர்களேயும், நெறி பிறழா அமைச்சர்களேயும், விழித்த கண் இமையா வீரர்களேயும் கொண்டு விளங்கியது. சங்கம் நிறுவிய காலம் தொட்டு அவ் வேந்தர் புகழையும் அந்நாட்டுச் சிறப்புக்களேயும், தம் இலக்கியத்தில் எடுத்துக் காட்டத் தோன்றிய நக்கீரர், கபிலர், பரணர், ஔவையார் முதலிய புலவர்களின் எண்ணிக்கை கணக்கில் அடங்கா. அப் புலவர் நாவினின்றும் எழுந்த தமிழின் சுவையே புறநானூறு, **ஐம்பெரும் காப்பியங்கள்** முதலிய அரிய இலக்கியங்களாய்த் திகழ்கின்றன.

இத்தகைய இலக்கியங்களால் பாடப்பெற்ற பாண்டியர்களுடைய புகழ் இமயம் வரை பரவி இருந்தது. அவர்களுள் சிலர் இமயம் வரை சென்று வடநாட்டிலும், வெற்றி பெற்றுத் தங்கள் சின்னமாகிய கயற் கொடியை இமயத்தில் நாட்டினர் என்ப. இவற்றிற்கு இலக்கியங்களும், மெய்க் கீர்த்திகளும் சான்ருகத் திகழ்கின்றன. "**பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்**", என்று பெரியாழ்வார் கூறியிருக்கின்ருர். பருப்பதம் என்பது ஈண்டு இமயத்தைக் குறிக்கும் என்று சான்ருேர் கூறுவர். பாண்டியர்களுடைய மெய்க்கீர்த்திகளில் முன்னேயோர் ஆற்றிய செயல்களும் இணைத்துக் கூறப்படுகின்றன. அவ்வாறு கூறும்பொழுது இமயம் வரைபாண்டியர்கள் சென்றதையும்மீனக்கொடியை அங்குப் பதித்ததையும் இணைத்துக் கூறுவது மரபு. அவற்றைக் கீழ்க்காணும் எடுத்துக்காட்டுக்களால்

அறியலாம். "இருங்கயல் ஆணை ஒருங்குடன் நடாஅய்" என்று பராந்தகன் நெடுஞ்சடையன் மெய்க் கீர்த்தியிலும், "வசையில் மாக்கயல் புலிசிலை வரை நெற்றியில் வரைந்தும்" என்று இராசசிங்க பாண்டியன் மெய்க் கீர்த்தியிலும், "மால்கடலை எழுந்தருளி மலையத்துக்கயல் பொறித்து" என்று பராந்தக பாண்டியன் மெய்க்கீர்த்தியிலும் "கயல் இரண்டும் நெடுஞ் சிகரக் கனவரையில் விளையாட" என்று சடாவர்ம சுந்தர பாண்டியன் மெய்க்கீர்த்தியிலும் திகழக்காணலாம். இவை போன்ற பல எடுத்துக் காட்டுக்கள் உள்ளன. இவையெல்லாம் முன்னையோர் செயலை இணைத்துக் கூறினும், பாண்டியர் '**இமயங் கண்ட செயல்**' விளங்குகின்றது.

இவ்வாறு வீரத்தாலும், கலைச் செல்வத்தாலும், புகழைப் பரப்பிய பாண்டி மன்னர்களுள் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, நன்மாறன், ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் முதலியோர் புகழ், **குன்றின் மேலிட்ட விளக்காய் விளங்கும்**. இவ்வேந்தர் வரிசையில் பாண்டியர் குல விளக்காய் இமயம் வரை சென்று வெற்றியைப் பரப்பி **மூவேந்தரும் ஒருவர்** என்று சொல்லும் நிலையில் சேர, சோழ, வேந்தர்களுடன் நட்புப் பூண்டு தமிழின் இலக்கியச் சுவையைப் பரப்பிப் புகழுடன் விளங்கினன் ஒரு வேந்தன். அவனே **உக்கிரப் பெருவழுதி** என்னும் பாண்டியர் [illegible]யாவான்.

உக்கிரப் பெருவழுதி பாண்டி நாட்டு ஆட்சியை ஏற்றுச் சிலகாலம் ஆயிற்று; தன் முன்னையோரினும் பெரும் புகழை எய்த எண்ணினன். இவ்வேந்தன் தக்க ஆராய்ச்சித் திறம் மிக்க அமைச்சர்களையும் வீரம் மிக்க படைத் தலைவர்களையும், அறிவுசான்ற புலவர்களையும் பிறசான்றோர்களையும் தேர்ந்து அமைத்துக்கொண்டான். அவர்களையன்றி அறி நுட்பம் வாய்ந்த தூதுவர்களையும், ஒற்றர்களையு படைத்துக் கொண்டான்.

**வழுதியின் போரும் வெற்றிகளும் :**

இவ்வேந்தன் நாட்டில் வளப்பத்தைப்பெருக் அறிவுச் செல்வத்தை ஆக்க முயன்றான். இவ அண்மி அரிய கலையைக் காட்டிப் பரிசில் பெற்று சென்ற புலவர் பலர்.

பாண்டி நாட்டில் **கானப்பேர் எயில்** என்ற ந உண்டு. இப்போது காளையார் கோயில் என வழ கும் தலமே அக்காலத்தில் கானப்பேர் எயில் எ வழங்கிவந்தது. உக்கிரப்பெருவழுதி ஆண்டகா லத்து **வேங்கைமார்பன்** என்ற சிற்றரசன் அந் ரத்தை ஆண்டுவந்தான்.

வேங்கைமார்பன் தன் ஊருக்கு அண்மையி உள்ள வீரர்களையெல்லாம் தனக்குத் துணையாக சேர்த்துக்கொண்டான். பாண்டி நாட்டில் ...

திக்கு அடங்காமல் இருந்தான். அவனுக்குக் கப்பம் கட்டவும் இல்லை.

வேங்கைமார்பன் கப்பம் கட்டாமல் பெருமிதத்தோடு இருப்பதை உக்கிரப் பெருவழுதி அறிந்து கொண்டான். வேங்கைமார்பனுக்கு அறிவு புகட்ட வேண்டுமெனத் தீர்மானித்தான். படைத் தலைவர்களும் அமைச்சர்களும் அவனைப் போர் செய்து அடக்க வேண்டுமென்று கூறினர். ஆனால் வழுதி தன்னுடைய பெரும்படையைக் கொண்டு அச் சிற்றரசனுடன் பொருது அவனை வெல்லுதல் தன் பெருமைக்கு இழுக்காகும் என்று கருதினன். அறிவிற் சிறந்த தூதுவன் ஒருவனை அனுப்பி அவன் கருத்தை உணர விரும்பினன். வேங்கைமார்பனிடம் அரசன் கருத்திற்கு இணங்க ஓர் தூதுவன் அனுப்பப் பெற்றான்.

தூதுவன் கானப்பேர் எயில் சென்று வேங்கை மார்பன் அரண்மனையை அடைந்தனன். அங்குச் சென்றவுடன் அவன் மண்டபத்தில் காத்திருந்தனன். தூதன் வருகையை அறிந்த வேங்கை மார்பன் மண்டபத்தினுள்ளே வந்து ஓர் ஆசனத்தில் அமர்ந்தனன். அரசன் வந்தவுடன் தூதுவன் அவனைப் பார்த்து வணக்கம் செலுத்தினன். வேங்கை மார்பன் அவனுடன் உரையாடத் துவங்கினன்.

**வேங்கைமார்பன்** :—வழுதியர் தூதரே ! வருக ! நீர் இங்கு வந்திருக்கும் காரணத்தை எடுத்து இயம்பலாமோ?

**தூதுவன் :**—தலைவரே! எம் அரசர் வழுதிய கோன் இட்ட ஆணையைத் தங்களிடம் கூறிவிட் மறுமொழி பெற்றுச் செல்ல வந்திருக்கிறேன்.

**வேங்கைமார்பன் :**—நும் அரசரின் ஆ என்னவோ ?

**தூதுவன் :**—தலைவரே! தாங்களும் தங்கள் முன் னோரும் எங்கள் பாண்டியருக்கு அடங்கித் திறை யளந்து வந்திருப்பதை அறிந்திருக்கக்கூடும். அப்படி இருந்தும் தாங்கள் ஆறு ஆண்டுகளாகத் திறை செலுத்தவில்லை. மேலும் எம்முடைய வேந்தருக் எதிராகப் போர் செய்யப் படைகளைத் தயாரிப்ப தாகவும் அறிகின்றோம். இன்னும் ஏழு நாட்களுக் குள் தாங்கள் மதுரை நகருக்கு வந்து செலுத்த வேண் டிய திறையைச் செலுத்த வேண்டும். நம் மன்ன வன் ஆணையின் கீழ்த் தாங்கள் நடப்பதற்கு அறி குறியாக எம் மன்னவனுடைய திருவோலக்க மண்டபத்தில் அரியணையின் கீழ் முடிபட வணங்கிச் செல்ல வேண்டும். இவற்றை ஆற்றத் தவறினல் பதினைந்து நாட்களில் நமது வழுதியர்கோன் நும் மூருக்கு வந்து உமது பெருமிதத்தை அடக்கிச் செல் வர். இது உறுதி. பின்னர் நடப்பவைகளைத் தாங் களே அறிந்து கொள்ளலாம்.

**வேங்கைமார்பன் :**—வழுதியர் தூதரே! நீர் தூத ராகையால் இதுவரை கேட்டிருந்தோம். எம்மை

இவ்வளவு கேவலமாக உமது அரசர் மதித்திருப்பது வருந்தத் தக்கது.

**தூதர்** :—தலைவரே! எல்லாம் அறிந்த உங்களுக்கு நான் கூறுவது ஒன்றுமில்லை. யானை பெரியது. ஆனால் மதங் கொண்டு மலையொடு பொருது முட்டு மாயின் கேடு உண்டாவது மலைக்கா அல்லது யானைக்கா? ஆறு பெரிதேயாயினும் கடலின் அலையை அடக்க வல்லதோ? உம்முடைய சிற்றூரைப் பேரூர் என்று எண்ணி உம் முன்னோர் சென்ற வழிக்கு மாறாகச் சென்று எம் வேந்தருடன் பகை தேடிக் கொள்கிறீர்கள். உறுதியாகக் கூறுகிறேன். இன்றே அவ்வேந்தரை வணங்குவீராயின் உம்முடைய பின்னோரும் உம்மைப் புகழ்வர். இதற்கு மேல் யான் ஒன்றும் கூறுவதற்கில்லை.

**வேங்கைமார்பன்** :—உம் அரசர் பெருமையை நான் அறிவேன். இருப்பினும் நான் கூறுவது ஒன்று உண்டு. நும் பாண்டிய மன்னர் ஆள்வதால் 'நாம் ஆளுதல் முறையன்று' என்று கருதி ஏனைய மன்னர்களெல்லாம் கடலில் ஒளித்து விட்டனரோ? தாமரையின் மலர்ச்சியைக் கண்டு கொட்டிப் பூ கூம்பி விடாது; மாணிக்கக் கல் வாழுமிடத்தில் யாமும் வாழ்வதா என்று கல்லும் மண்ணும் மறைந்து விடுமோ? நிற்க, எமது குடியும் இந்நாட்டிலே தலைமை வகித்திருந்த பழையதொரு குடியாம் என்பதைத் தாங்கள் யாவரும் அறிந்ததே; எம் குடிப்

புகழ் குன்ற, நும் அரசருக்குப் பணிந்து வாழ, ஒருப் படேன்; இவையே என் உறுதியான மறுமொழிகள். ஆகையால், தூதரே, நாம் கூறிய மறுமொழியை உணர்ந்து அவற்றை நுமது வேந்தரிடத்துச் சென்று இயம்பலாம்.

தூதர் :—மன்னவரே ! எம் வேந்தர் வழுதியர் கோன் பண்பின் பெருமையை அறியாது பகைத்துக் கொண்டீர்கள். சிறந்த போர்த்திறமை படைத்த நீர், நேரிய நிலையில் வந்து எம் அரசை வணங்கினுல் அவர் உம்மை நல்ல நிலையில் நிறுத்தலாம் என்று எண்ணியிருக்கிருர். ஆனுல் உமது எண்ணம் வேரு யிற்று. விதியின் படியே நிகழும்; வருகிறேன். இன்னும் இரண்டு வாரங்களில் பாண்டியர் மறவர் நும் நாட்டில் போர்க் கோலத்தோடு நுழைவர். இது உறுதியான மொழி.

தூதன் வேங்கை மார்பனிடம் விடைபெற்றுப் பாண்டியனிடம் வந்து நிகழ்ந்தவற்றை இயம்பி னன். இம்மொழிகளைக் கேட்ட பாண்டியன் கோபக் கனலில் உழன்றனன். தம் படைத் தலைவரை அழைத்து, "இன்றைக்குப் பதினைந்தாம் நாள் வேங்கைமார்பனுடன் போருக்குப் புறப்பட வேண்டும். வேண்டுவன செய்க," என்று ஆணை யிட்டான்.

படைகள் தயாராயின. குறித்த நன்னுளில் வழுதி புறப்பட்டனன். இடை வழியில் **திரிபுவனம்,**

சிவகங்கை முதலிய தலங்களுக்குச் சென்று ஆங்காங்கு ஆண்டவனை வழிப்பட்டு, முரசு முழங்க கானப் பேரெயில் வந்தடைந்தான். வழுதியின் படைகள் அணிவகுத்து நின்றன.

வழுதி போரிடப் போவதை முறைப்படி தூது வன் மூலம் வேங்கைமார்பனுக்குச் சொல்லி அனுப்பி னன். இச்செய்தி அறிந்த வேங்கைமார்பன் காவ லர்களுக்கு அரணைக்காக்க ஆணையிட்டான் ; தானும் அவ்வாறே தலைமை பூண்டு அரணைக் காத்தான். மூன்று நாட்கள் போர் நடந்தன.

கானப் பேரெயில் பல பக்கங்களில் பிளக்கப் பட்டன. வேங்கைமார்பனும் அவன் துணையாக நின்றோரும் தம்மால் இயன்ற அளவு தம்படை வீர ரைத் தூண்டிவிட்டனர். ஆனால் பயன் ஏதும் ஏற்படவில்லை. பாண்டிய வீரர்கள் ஊருக்குள் நுழைந்தனர். அதற்குள் வேங்கைமார்பனும், அவன் துணைவர்களும் நுழைபுலத்தின் வழியாக மறைந்தனர். கானப் பேரெயிலைக் கைக்கொண்ட வுடன் பாண்டிய வீரர்கள் பேராரவாரம் செய் தனர். உடனே உக்கிரப் பெருவழுதி வீரர்களை அழைத்து வேங்கைமார்பனைத் தேடிப் பிடித்துவர ஆணையிட்டனன். வழுதியர் கோன் நேராக வேங்கைமார்பன் அரண்மனைக்குள் புகுந்தான். அங்கிருந்த பளிக்கு மண்டபத்தின் மேல் அமர்ந்த னன். அப்பொழுது அமைச்சரும் தானைத் தலைவரும் உடனிருந்தனர்.

வழுதியின் வெற்றியை அறிந்தார் ஐயூர் மூலங்கிழார் என்ற புலவர்; அவர் வேறு சில புலவர்களை அழைத்துக்கொண்டு அங்கு வந்திருந்தார். வெற்றி பெற்ற அரசன் பளிக்கு மண்டபத்தில் அமர்ந்து இருப்பதைக் கண்டு புகழ்ந்து பாட நினைந்தார். உடனே அரசனைப் பார்த்து "வேந்தர் வேந்தே, தாங்கள் புலமை பூண்ட புரவலன்; நும் முன்னே யாம் பாட அஞ்சுகின்றோம். இருப்பினும் இத்தகைய அரிய சந்தர்ப்பத்தில் எம் செய்யுளால் நும் புகழை உலகறியச் செய்வது எங்கள் கடமை," என்று கூறிக் கீழ்க்காணும் ஓர் அரிய செய்யுளைப் பாடி அருளினார்.

"புலவரை யிறந்த புகழ்சால் தோன்றல்,
நிலவரை யிறந்த குண்டு கண்ணகழி
வான்றோய் வன்ன புரிசை, விசும்பின்
மீன் பூத்தன்ன உருவ ஞாயில்,
கதிர் நுழை கல்லா மரம் பயில் கடிமனை,
அருங் குறும் புடுத்த கானப் பேரெயில்,
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும் புண்ணீரினும் மீட்டற் கரிதென
வேங்கை மார்பன் இரங்க, வைகலும்
ஆடு கொளக் குழைந்த தும்பைப் புலவர்,
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே!
இழுநர் இசையோடு மாயப்
புகழோடு விளங்கிப் பூக்கநின் வேலே."

—புறநானூறு செய்யுள் 21

வழுதியர் கோன் தென்னாட்டில் பெருவெற்றி பெற்று ஆணையைச் செலுத்தியதேயன்றி இமயம்

வரை சென்று வெற்றி பெற்றுத் திரும்ப நினைத்தான் எனச் சரித்திர ஆசிரியர் கூறுவர்.

வழுதி தன் நாடு கடந்து வடநாடு நோக்கிப் புறப்பட்டான். இடையிலுள்ள அரசர்களெல்லாம் அவனை உபசரித்து வழிபட்டனர். பல வீரர்களுடன் கங்கைக் கரையை அடைந்தான். அப்பக்கங்களில் அரசியற்றியிருந்த ஆரிய அரசர்கள் ஒருங்கு சேர்ந்து எதிர்த்தனர். தன் போர்த் திறமையாலும், இறைவன் அருளாலும் அவர்களுடன் பொருது வெற்றி பெற்றான் வழுதியர்கோன். பின்னர் போர்வீரர்களுடன் இமயத்தை அடைந்தான். அப்பக்கமுள்ள அரசர்கள் வழுதியின் ஆற்றலை அறிந்து வழிபட்டனர். இமயத்தில் தம் வெற்றிக்கு அறிகுறியாகக் **கயற்கொடியைப்** பொறித்துத் திரும்பினன். இவ்வாறு சரித்திரப் பேரறிஞர் கூறுவர்.

உக்கிரப் பெருவழுதி பல நாடுகளைக் கடந்து தென் நாடு திரும்பினன். அக்காலத்தில் சேர நாட்டைச் **சேரமான் மாரிவெண்கோவும்**, சோழ நாட்டை, **இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும்** ஆண்டு வந்தனர். இவ்விரு வேந்தரும் இமயம் கண்டு திரும்பிய காவலனை வரவேற்று உபசரித்தனர். அவ்விரு வேந்தரிடத்தும் இவன் கொண்ட பேரன்புக்கு எல்லை இல்லை. அவர்களைத் தன் நாட்டிற்கு அழைத்து வந்தனன். மதுரையம்பதி வந்ததும் இவ்வேந்தனுடன் அவர்கள் தங்கியிருந்தனர்.

வழுதியர்கோன் நாளோலக்கமண்டபத்தில் அவை களும் உடன் வீற்றிருந்தனர். மூவேந்தரும் ஒருங் இருந்த இக்காட்சியைக் கண்ட ஔவையார் மூவ ரையும் புகழ்ந்து, வாழ்த்தி, அரிய செய்யுளாயிப் பாடி அருளினார்.

"நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே யாயினுந் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினும் நோற்றோர்க் கொழியும்
ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறைய
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரி தேறல் மாந்தி மகிழ்சிறந்(து)
இரவலர்க் கருங்கலம் அருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை யல்ல(து)
ஆழுங்காலைப் புணைபிறி தில்லை.
ஒன்று புரிந் தடக்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தீர்,
யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும் இம்மென
இயங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே."

—புறநானூறு செய்யுள்-367.

பாடலையேற்ற வழுதியர்கோன் ஔவையாருக் குச் சிறந்த பரிசுகளை நல்கியதுடன் அங்குக் குழுமி யிருந்த புலவர்களுக்கும், ஏனையோர்க்கும் சிறந்த வெகுமதிகளையும் நல்கி விடையளித்தனன்.

**வழுதியின் கலைத்தொண்டு :**

உக்கிரப் பெருவழுதி தம்மிடத்து அண்மிய புலவர்களுக்குப் பரிசில் கொடுத்து அனுப்பிவிட்டுப் பின்னர் சேரர், சோழர் ஆகிய வேந்தருடன் அளவளாவத் தொடங்கினன். வழுதி அவ்விருவரையும் பார்த்து ''நாம் மூவரும் பகையின்றிக் கலந்திருப்பது தமிழ் நாட்டுக்கும் தமிழுக்கும் நம்மால் இயன்ற பணியைச் செய்ய உதவுமன்றோ?'' என்று கூறினன். அதற்குச் சோழ வேந்தன் பாண்டியனின் மொழிகளை அன்போடு ஏற்றுக்கொண்டு, ''வழுதியரே! நும் பெருமையை யான் என்னென்று கூறுவேன்? நும் முன்னோர்கள் சங்கத்தை நிறுவினார்கள். தாங்கள் நூல்களைச் சேர்த்துப் புலவர்களை ஆதரித்து, அப்புலவர்கள் மூலம் நூல்கள் இயற்றியும், ஆராய்ச்சிகள் செய்தும் தமிழ்க் கலையை வளர்த்தும் வருகின்றீர்கள். தாங்கள் ஆற்றும் பணிகள் என்றும் அழியாத புகழையுடையனவாய் இருக்கின்றன. அத்தகைய தங்களுடன் யாமும் நட்புடன் பணியாற்றுவதில் என்ன தடை! நாம் என்றும், முத்தமிழ், மும்மறை, முப்பொருள் போல் இணைந்து வாழவேண்டும் என்பதே எமது குறிக்கோள். இவ்வாறு நம் நட்புப் பெருக யாம் ஆற்றக்கூடிய பணி இன்னது என்று நீவிர் எது கூறினும் யாம் உடன்படுவோம்,'' என்று சோழ வேந்தன் கூறினன். சோழ வேந்தன் கூற்றுக்களை வழுதியர் கோன் பேரன்போடு ஏற்றுக்கொண்

டான். நாடு நலம்பெற்றுத் திகழ வேண்டுமெனின் மூவருக்கும் ஒற்றுமையே முதற்கண் தேவை என்று கூறிச் சேர வேந்தனை நோக்கி அன்னார் கருத்தினை வினவினன்.

சேர வேந்தன் பாண்டியனைப் பார்த்து "வழுதியர் கோவே! யான் கூறுதற்கு என்ன இருக்கிறது: சோழ வேந்தராகிய பெருநற் கிள்ளியார் கூறிய கூற்றுக்கள் அனைத்தும் எனக்கு உடன்பாடே. நாம் முத்தமிழ்போல் ஒன்றி மூவரும் ஒருவர்க்கொருவர் நட்புப்பூண்டு உதவியாய் ஒரே எண்ணத்தோடு வாழ்வோமானல் நம்மால் நாட்டிற்கு விளையக்கூடிய நன்மைகள் பல. தாங்கள் ஆற்றக்கூடிய கலைத் தொண்டிற்கும் ஏனைய பணிகட்கும் யானும் உடன்படுவேன்" என்று கூறி முடித்தான். சேரர் கூற்றுக்களை ஏற்ற வழுதியர் கோன், "சேரநாட்டின் செல்வரே! தாங்கள் கருதுவதும் எங்கள் எண்ணத்திற்கு உடன்பட்டதாகவே இருக்கிறது. நாம் மூவரும் ஆற்றக்கூடிய பணியைக் கூறுகின்றேன். அகப் பொருள், புறப் பொருள்பற்றி நம் நாட்டுப் புலவர் பெருமக்கள் பாடிய பாக்கள் பல உள. அவற்றை எல்லாம் ஒரு முறைப்படுத்தி அமைத்தால் உலகத்திற்குப் பேருதவியாய் இருக்குமன்றோ? நாம் படையாலும், பிறவற்றாலும் அடையும் பெரும் புகழானது, இத்தகைய கலைக்கு ஆக்கும் தொண்டின் புகழுக்கு இணையாகுமோ?" என்று கூறி முடித்ததும், சோழன் பெருநற்கிள்ளி "வழுதியர்

கோவே! நும் முன்னோர் ஆற்றிய செயலையே நீரும் செய்ய விரும்புகின்றீர். அவை மிகவும் பாராட்டுதற்குரியதே. தாங்கள் ஆற்றக்கூடிய தமிழ்த் தொண்டில் தங்களுடன் ஒத்துழைத்து எம் மாலான பணியைத் தடையின்றி ஆற்றுவேன்; மேலும் எம்நாட்டுப் புலவர்கள் செய்த அரிய செய்யுட்கள் பல அரண்மனையில் அமைத்துக் காப்பாற்றப்பட்டிருக்கின்றன. அவற்றை அனுப்பி வைக்கின்றேன்,'' என்று கூறினான். உடனே சோழன் உரைகளைக் கேட்டுக்கொண்டிருந்த சேரன்,— ''யானும் தாங்கள் ஆற்றும் கலைத்தொண்டில் ஈடுபட்டு எம்மாலான பணியைச் செய்வேன் இது உறுதி,'' என்று கூறினன்.

இவர்களுடைய மொழிப்பற்றும், நட்பும் கொண்ட பேருரைகளைக் கேட்ட வழுதியர் கோன் பெருமிதங்கொண்டு, ''தாங்கள் இருவீரும் நான் எண்ணியதை முடிக்க இசைந்ததற்குப்பெருமகிழ்ச்சி கொள்கிறேன். இவ்வாறே நமது அன்பு கலந்த நட்பு ஒற்றுமையுடன் மேலோங்கி வளருமாயின் நம் நாடு சிறந்த வளத்தோடு அழியாக் கலைச்செல்வத்துடன் விளங்கும் என்பது உறுதி,'' என்று கூறினன்.

சேரரும், சோழரும், வழுதியிடத்தினின்றும் பிரியா விடைபெற்றுத் தம் நாடு சென்று மேலே ஆற்றக்கூடிய கலைத்தொண்டில் ஈடுபட்டனர்.

வழுதியர் கோன் சோழ வேந்தனையும், சேரனையும் அனுப்பிவிட்டுக் கலைத்துறையில் ஈடுபட்டு, நாட்டில் பல புலவர்களால் பாடப் பெற்றிருந்த பாக்கள் பலவற்றைச்சேர்க்கலாயினன். அவனுடைய பொழுதெல்லாம் தமிழ்க்கலை வளர்ச்சியிலேயே கழிந்தது: தம் நாட்டுப் புலவர்களையும், பிற நாட்டுப் புலவர்களையும் வரவழைத்தான்.

அவர்கள் இயற்றிய செய்யுட்களையெல்லாம் சேர்த்து அமைத்தான்; அகப்பொருள், புறப் பொருள் பற்றிய செய்யுட்கள் ஏராளமாகக் குவிந்தன. இவற்றையன்றிச் சேரவேந்தனும், சோழ மன்னனும், தாம் கூறியபடி கணக்கற்ற செய்யுட்களை அனுப்பி வைத்தனர். அவற்றையெல்லாம் ஒரு கோவைப் படுத்தக் கருதினன். இவ்வாறு அடியளவு முதலிய பொருந்த, தொகுத்தமைத்தற்குத் தக்க புலவர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க எண்ணினன்.

அப்போது மதுரையில் " **உருத்திர சன்மர்** " என்னும் ஒரு பெரும் புலவர் வாழ்ந்து வந்தார். அவர் செய்யுள் ஒன்றும் இயற்றவில்லை. இருப்பினும் பிறர் செய்யும் அரிய செய்யுட்களிலும், உரைகளிலும், ஆழ்ந்த ஆராய்ச்சி உடையவராக இருந்தார். அவருடைய ஆராய்ச்சித் திறன் எல்லாப் புலவர்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டிருந்தது.

வழுதியர் பூபதி தான் **ஆற்றும் பணிக்கு** உருத்திர சன்மரே தகுதியானவர் எனக் கருதினன்.

உடனே அவரை வரவழைத்தனன். வேந்தருடைய அன்பைப் பெற்ற உருத்திர சன்மர் அரசன் சபைக்கு வந்தார். அரசனும் அவரைத் தக்க மரியாதையுடன் வரவேற்று அளவளாவினன். வழுதியர் கோன் உருத்திர சன்மரை ஒரு சிறந்த ஆசனத்தில் அமரச்செய்தான். அவர் ஆசனத்தில் உட்கார்ந்து அரசனை வாழ்த்தினர். பின்னர் இருவரும் நூல்களைத் தொகுக்கும் முறையைப்பற்றி உரையாடினர்.

**உக்கிரப் பெருவழுதி** :—செந்தமிழ்ப் புலவரே! இந் நாட்டுக்காக நாம் ஆற்றக்கூடிய அரும்பணி ஒன்று உண்டு. அப்பணியைத் தங்கள் மூலமாகவே ஆற்றுவிக்கலாம் என்று யான் எண்ணியிருக்கின்றேன்.

**உருத்திர சன்மர்** :—வழுதியர் கோவே ! தாங்கள் ஆற்றக் கருதியிருக்கும் அப்பணி யாதோ? அவ்வரும் பணியை எளியேனைக்கொண்டு நிறைவேற்றக் கருதியுள்ளது, என் முன்னையோர் செய்த நல்வினையின் பயனே யாகும். அப்பணியைக் கூறியருள வேண்டுகின்றேன்.

**உக்கிரப் பெரு வழுதி** :—பல பெரும் புலவர்கள் தங்கள் உள்ளக் கருத்தைச் செய்யுளால் வெளியிட்டு உலகிற்குப் பயன் உண்டாகுமாறு செய்திருக்கின்றனர். அவர்கள் செய்த முயற்சியின் பயனை வருங் காலத்திற்கும் உதவுமாறு செய்ய வேண்டும் என்பதே என் உள்ளக் கிடக்கை.

**உருத்திர சன்மர்:**—அரசர் பெருந்தகையே! தாங்கள் கூறிய அப்பணியைச் செய்யவேண்டியது மிக இன்றியமையாததாகும். மேலும் இத்தகைய அரும் பணிகள் எல்லாம் தங்களைப் போன்ற அரசர்களின் ஆதரவு இன்றி நிகழுமோ? முன்னுளிலும் தங்கள் குடியிற் பிறந்தோரே புலவர் செய்யுட்களைத் தொகுப்பித் திருக்கின்றனர். **பன்னுடு தந்த பாண்டியன் மாறன்வழுதி** என்பான் நற்றிணை நானூறு என்ற அகப்பொருட் சுவையுள்ள நூலைத் தொகுத்து அமைக்குமாறு செய்திருக்கின்றனன். **குறுந்தொகை** என்னும் நூலைப் **பூரிக்கோ** என்பார் தொகுப்பித் தார். **ஐங்குறுநூறு** என்னும் நூலை **மாந்தரஞ் சேரல்** என்னும் வேந்தர் கூடலூர் கிழாரைக் கொண்டு தொகுப்பித்தார். இவ்வாறு நூல்களை யாத்த பெரும் புலவர்களுடைய புகழ் பரவுவதற்கு அரசர்களின் ஆதரவே காரணமாய்த் திகழ்கின்றது. ஆகையால் தாங்கள் இப்பொழுது செய்யக் கருதியிருப் பதைக் கூறின் யான் இயன்ற பணியைச் செய்கின் றேன்.

**உக்கிரப் பெருவழுதி:**—புலவர் பெருந்தகையே! கபிலர், பரணர், ஔவையார், கல்லாடர், மருதன் இளநாகனர், மாமூலனர் முதலிய பெரும் புலவர் கள் பாடிய செய்யுட்கள் பல உள. அவற்றுள் அகப் பொருள் செய்யுட்கள் தொகுப்பின்றிப் பரவிக் கிடக்கின்றன. அவற்றைத் தாங்கள் ஒரு முறைப் படுத்தித் தொகுத்து அமைத்தருள வேண்டு கின்றேன்.

**உருத்திர சன்மர்** :—பாண்டியர் கோவே ! எனக்கு இத்தமிழ்த் திருப்பணியைச் செய்யத் தாங்கள் பணித்தருளியது மிக்க மகிழ்ச்சியையும் ஊக்கத்தை யும் அளிக்கின்றது ; இத்தகைய ஒரு பணியை ஆற்ற வேண்டுமென்று யானே நீண்ட நாட்களாய்க் கருதி இருந்தேன். இப்பொழுது தாங்களே இவ்வரிய பணியை எனக்கு இட்டிருக்கின்றீர்கள். அப்பணியை ஏற்குமுன் அவற்றைத்தொகுக்கும் முறையைப்பற்றி என் உள்ளத்தில் இருக்கும் சில கருத்துகளைக் கூற விழைகின்றேன். முன்னுளில் நான்கடி முதல் எட்டு அடிகள் வரையில் உள்ள செய்யுட்கள் ஒரு வரம்பு படுத்திக் **குறுந்தொகை** எனவும், ஒன்பது முதல் பன்னிரண்டு அடி வரையிலும் உள்ளவற்றை **நற்றிணை** எனவும் தொகுத்துள்ளனர். தற்காலத்தில் புலவர் கள் பாடிய செய்யுட்களோ பதின்மூன்று அடிகட்கு மேல் இருக்கின்றன. ஆகையால் பதின்மூன்று அடிக்குமேல் முப்பத்தேழு அடிவரையில் உள்ள நூல்களை ஒரு தொகைப்படுத்தி அமைக்கலாம் என்று கருதுகிறேன்.

**உக்கிரப் பெருவழுதி** :—தங்கள் கருத்தை ஏற்கின் றேன். இக்காலத்திலும், சென்ற நூற்றுண்டிலும் புலவர்கள் பாடிய செய்யுட்கள் நம் அரண்மனையின் சுவடிச் சாலையில் உள. மேலும் சோழரும், சேரரும் அனுப்பிய செய்யுட்களும் உள. அவற்றை யெல் லாம் ஆராய்ந்து ஒழுங்குபடுத்தித் தொகுக்க வேண்டுகின்றேன்.

**உருத்திர சன்மர்:**—அரசர் பெருந்தகையே! யானும் அச்செய்யுட்களை யெல்லாம் சேமித்து வைத்திருக் கின்றேன். அம்மட்டோ! தங்களைப் போன்ற அர சர்களும் அறிவுடைச் செல்வர்களாய்த் திகழ்ந்து பாடிய பாக்களும் உள்ளன. பாண்டியன் **அறிவுடை நம்பி** பாட்டும், கோட்டம்பலத்துத் துஞ்சிய சேர மான் **இளங்குட்டுவன்; பாலை பாடிய பெருங் கடுங்கோ,** மருதம் பாடிய இளம் கடுங்கோ, ஆகியோர் பாடிய பாக்களும் உள. மேலும் தாங்கள் பாடிய பொருட் செறிவமைந்த பாடலும் உள.

**உக்கிரப் பெருவழுதி:**—புலவர் திலகமே! மக்கட் பேற்றின் பெருமையை விளக்கிப் பாடிய அறிவுடை நம்பியின் பாடல் எத்துணை அழகாய்த் திகழ்கின் றது.

'' படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைபெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்
குறு குறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக் குறை இல்லை தாம் வாழும் நாளே ''

(புறநானூறு-188)

'இத்தகைய புலமை வாய்ந்த மன்னர்கள் குடியிற் பிறந்தேன்' என்று கூறுவதில் எனக்கும் புகழ் உண்டு என்பதில் ஐயமில்லை. யான் நற்றிணையிலும் ஒரு செய்யுள் பாடியிருக்கின்றேன்.

**உருத்திர சன்மர்:**—நும் முன்னோர் புகழினும் நும் புகழே மேன்மையுற்றுத் திகழ்கின்றது. அன்னார் இயற்றிய செய்யுட்களையும் சேர்த்து, அவர்களு டைய புகழ் பெருமையுறும்படிப் பணிசெய்யும் தங் கள் புகழே மேன்மையுற்றதன்றோ! அன்றியும் யான் சில நாட்களாகப் பல செய்யுட்களை ஆராய்ந்து வைத்திருக்கிறேன். அவ்வாறு சேமித்து அமைத்த செய்யுட்களுள் நானூறு பாக்களை ஒரு முறையாகத் தொகுத்தமைத்திருக்கின்றேன், அவற்றை மூன்று பகுதிகளாகப் பிரித்து அமைக்கலாம் என்பது என் னுடைய கருத்து.

**உக்கிரப் பெருவழுதி** :—செந்தமிழ்ச் செல்வரே! நான் எண்ணிய கருத்துப்படியே தாங்கள் இந்த அரிய பணியைச் செய்திருக்கின்றீர்கள்; ஆனால் தாங்கள் தொகுத்த நானூறு செய்யுட்களையும் மூன்று பகுப்பாகப் பிரிக்க எண்ணிய காரணத்தை அறிய விரும்புகின்றேன்.

**உருத்திர சன்மர்** :—அரசே! அவற்றை நன்கு ஆய்ந்து பார்த்துச் செய்யுட்களின் நடை, சொல் அமைவு, பொருட்செறிவு ஆகிய மூன்று வகையா கப் பிரித்தமைத்தேன்; அவற்றுள் பல செய்யுட்கள், யானைகளின் வரிசை போன்று அணிபெற அமைந்த மையால், அவற்றிற்குக் **களிற்று யானை நிரை** என அமைத்தேன். பின்னர் மணிகள் மிடைந்து பவளம் போன்ற சொற்கள் அமைந்து பல செய்யுட்கள்

விளங்கினமையால், அவற்றை எல்லாம் சேர்த்து **மணிமிடை பவளம்** என்ற பெயரமைத்துத் தொகுத்திருக்கின்றேன். மூன்றாவதாக, முத்துக்களால் ஆகிய கோவை போன்று பொருட்செறிவுடன் விளங்கியமையால் அவற்றை **நித்திலக் கோவை** என்று தொகுத்தமைத்திருக்கின்றேன்.

**உக்கிரப் பெருவழுதி** :—செந்தமிழ் ஆக்கிய செல்வரே! ஒவ்வொரு பிரிவிலும் எத்துணைச் செய்யுட்கள் உள? அவை எம்முறையில் அமைக்கப்பட்டன?

**உருத்திர சன்மர்** :—களிற்று யானை நிரையில் நூற்றிருபது பாடல்களும், மணிமிடை பவளத்தில் நூற்றெண்பது செய்யுட்களும், நித்திலக் கோவையில் நூறு செய்யுட்களும் உள்ளன. இவை பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற திணையின் முறைப்படி அமைந்திருக்கின்றன. பாலைத் திணை இருநூறு செய்யுட்களையும், குறிஞ்சித் திணை எண்பது செய்யுட்களையும், மருதம், நெய்தல், முல்லை ஆகியவை முறையே நாற்பது செய்யுட்களையும் பெற்றிருக்கின்றன. இவ்வாறு நாம் முறைப் படுத்தித் தொகுத்து அமைத்து வைத்திருப்பதால் பிற்காலத்தார் செய்யுட்களின் கருத்துக்களையும் நயங்களையும் எளிதில் அறிந்து கொள்ள முடியும் என்பது என் நோக்கம்.

**உக்கிரப் பெருவழுதி** :—ஆழ்ந்த அறிவு படைத்த தங்களைப் போன்ற சான்றோர்கள் என்றும் அழி

யாத தன்மையை உடைய ஓர் அரிய பணியைச் செய்வாராயின் அது உலகம் போற்றும் நிலையில் அமைந்திருக்கும் என்பதில் ஐயுறவே இல்லை. தாங்கள் ஆற்றிய இப்பெரும் பணியால் என்றும் தங்கட்குப் பெரும் புகழ் நிலைக்கும் என்பது உறுதி. யானும் தங்களால் பேறு பெற்றேன் என்றால் அது மிகையாகாது.

**உருத்திர சன்மர்** :—இறுதியாக யான் கூறவேண்டியது சில உள. இவ்வாறு முறைவைப்புப் பெற்ற நானூறு பாக்களும்கொண்ட ஒரு நூலுக்குக் கடவுள் வாழ்த்துத் தேவையன்றோ? அகப்பொருளின் வாழ்வையும் வளர்ச்சியையும் அருள் புரியும் சிவபெருமான் வாழ்த்தினையும் முதற்கண் பெற்றிருப்பது நன்றென்று தோன்றுகிறது. அதற்கியையப் பெருந்தேவனார் இயற்றிய அகவல் ஒன்று உள்ளது. அச்செய்யுளையே கடவுள் வாழ்த்தாக அமைக்கக் கருதியிருக்கின்றேன்.

**உக்கிரப் பெருவழுதி** :—புலவர்ஏறே! தங்கள் எண்ணப்படியே கடவுள் வாழ்த்துப் பாட்டு அமையலாம், என்பது என் எண்ணம். ஆனால் இவ்வரிய நூற்குப் பெயர் அமைக்கும் பொறுப்பு என்னுடையதாக்கினீர் போலும்!

**உருத்திர சன்மர்** :—நூலுக்குப் பெயர் அமைப்பதில் தங்கள் கருத்துப்படி அமைக்க வேண்டும் என்பது என் நோக்கம்: கலித்தொகை, ஐங்குறுநூறு,

குறுந்தொகை என்ற தொகை நூல்கள் அவ்வவற் றிற்குரிய காரணங்களால் பெயர் பெற்றன. இந் நூற்கு அவற்றிற்கு மாறுன சிறந்த பெயர் அமைக்க வேண்டும் என்பது என் அவா; அகப்பொருட் செறிவு நிறைந்த நம்முடைய நூலுக்கு குறுந் தொகைக்கு மாருக நெடுந்தொகை என்று பெயர் அமைக்கலாமோ, வேறு முறையில் அமைக்கலாமோ என்ற எண்ணத்தில் ஆழ்ந்திருக்கிறேன். இவற்றைத் தங்களுடைய முடிவுக்கே விட்டிருக்கிறேன்.

**உக்கிரப் பெருவழுதி** :—அகப் பாட்டுகளுள் பெரிய அளவு கொண்ட இந்நூலை நெடுந்தொகை என்றே பெயர் அமைக்கலாம் என்பது என் கருத்து. குறுந் தொகையைப் போன்று இந்நூலும் நானூறு செய் யுட்களைக் கொண்டு திகழ்கின்றது. இந்நூற்கு நெடுந்தொகை என்ற பெயரேயன்றி அகத்தைப் பற்றி அமைந்த நானூறு பாக்களைக் கொண்டதால் அகநானூறு என்றும் வழங்கலாம். நெடுந்தொகை அல்லது அகநானூறு என்ற பெயருடன் இந்நூல் என்றும் சிறந்த தொகை நூலாகத் திகழ வேண்டும் என்று இறைவன் அருளால் உறுதி செய்கிறேன்.

இவ்வாறு உருத்திரசன்மரும் வழுதியும் இலக் கியத் துறையில் ஈடுபட்டு நெடுந்தொகையாகிய அகநானூறு, சிறந்த முறையில் தொகுக்கப்பட்டது. புலவரும் தக்க மரியாதைகளுடன் விடை பெற்றுச் சென்றார்.

பாண்டியர் பூபதியாகிய உக்கிரப் பெருவழுதி இத்தகைய அரிய செயலையேயன்றி கல்வித் துறையில் மேலும் அரிய தொண்டுகளைச் செய்து தக்க புலவர்கட்கு அரிய பரிசில் வழங்கி என்றும் அழியாக் கலைச்செல்வத்தை வளர்த்தனன். அவன் அரண்மனையில் ஏராளமான புலவர்கள் வந்து சென்றுகொண்டிருந்தனர். அக்காலத்தில் தொண்டை நாட்டில் திருமயிலாப்பூரில் வாழ்ந்த வள்ளுவர் பெருமான், என்றும் உலகம் போற்றும் வண்ணம் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் முப்பாலாகத் தொகுத்துத் தமிழ் மறையாகிய திருக்குறளை இயற்றியிருந்தார். அந்நூலைப் படித்த சான்றோர் பலர் அதன் பெருமையை அறிந்தனர்; அந்நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றப் படல்வேண்டும் என்று கருதினர். வள்ளுவர் வாய்மொழியாகிய திருக்குறளின் பெருமையை அறிந்த உக்கிரப் பெருவழுதியே அந்நூலைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றித் திருவள்ளுவருக்குச் சிறப்புச் செய்தான் என்று ஆன்றோர் கூறுவர்.

கல்வி வளர்ச்சியிலேயே கவனத்தைச் செலுத்தியிருந்த வழுதியின் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் அவனுக்கு உறுதுணையாக இருந்து நாட்டைக் கண்காணித்தனர். இத்தகைய நிலையில், கானப் பேரெயிலின் தலைவனாக இருந்து வழுதிக்கு அஞ்சி மறைந்திருந்த வேங்கை மார்பன், அரசனிடம் நேராக வந்து வணங்கினன். கருணை வள்ளலாகிய

வழுதியர் கோன் அவனுக்கு அறிவு புகட்டி அவனுக் குரிய ஆட்சியைக் கொடுத்தனுப்பினன்.

வழுதியர் கோன் தனக்கு வரும் திறைப்பணத் தில் ஒரு பங்கினைத் தமிழ் வளர்ச்சிக்குப் பயன் படுத்தினான். பல அற நிலயங்களை அமைத்து எல் லாம் வல்ல இறைவனுக்கு அரிய திருப்பணிகள் செய்தமைத்தான்.

இவன் குறிஞ்சி, மருதம் ஆகிய நிலங்களைப் புனைந்து பாடுவதில் வல்லவன். இவனுடைய அரிய பாடல்கள் நற்றிணையிலும் அகநானூற்றிலும் காணப்படுகின்றன. இத்தகைய பெரும் சிறப்பு வாய்ந்த சங்கப் புலவர்களுடன் ஒப்பப் பாடும் பெருமை பெற்றிருந்த பாண்டியர் பூபதி முதுமை எய்தி இறைவனைத் துதித்த வண்ணம் அவன் திரு வடி நிழலை அடைந்தனன்.

வழுதியர் கோன் அவனுக்கு அறிவு புகட்டி அவனுக்குரிய ஆட்சியைக் கொடுத்தனுப்பினன்.

வழுதியர் கோன் தனக்கு வரும் திறைப்பணத்தில் ஒரு பங்கினைத் தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படுத்தினான். பல அற நிலயங்களை அமைத்து எல்லாம் வல்ல இறைவனுக்கு அரிய திருப்பணிகள் செய்தமைத்தான்.

இவன் குறிஞ்சி, மருதம் ஆகிய நிலங்களைப் புனைந்து பாடுவதில் வல்லவன். இவனுடைய அரிய பாடல்கள் நற்றிணையிலும் அகநானூற்றிலும் காணப்படுகின்றன. இத்தகைய பெரும் சிறப்பு வாய்ந்த சங்கப் புலவர்களுடன் ஒப்பப் பாடும் பெருமை பெற்றிருந்த பாண்டியர் பூபதி முதுமை எய்தி இறைவனைத் துதித்த வண்ணம் அவன் திருவடி நிழலை அடைந்தனன்.

# சேரநாட்டுச் செம்மல்

தமிழ் நாட்டின் சிறப்பினைக் கூறிய ஒளவைப் பிராட்டியார் சேரநாட்டை முதற்கண் அமைத்து "வேழமுடைத்து மலைநாடு" என்று கூறியுள்ளார். மலைநாடு என்பது ஈண்டு சேரநாட்டையே குறிக்கும். சேலம், நீலகிரி, மாவட்டங்களும், மலையாளப் பகுதிகளும் சேர நாட்டைச் சேர்ந்தவை. நிறைந்த மலைத் தொடர்களைக் கொண்டு ஏராளமான மலைபடு பொருள்களை விளைவிப்பனவாய், இயற்கை வனப்பில் குன்ருது விளங்கியது அந்நாடு.

அத்தகைய சிறப்பு வாய்ந்த சேர நாட்டை ஆதிக்காலந் தொட்டு வீரமும் பண்பும் மிக்க சேர மன்னர் பலர் சிறப்புடன் ஆண்டு வந்தனர். பதிற்றுப்பத்து என்னும் சிறப்பு வாய்ந்த சங்கநூல் சேர வேந்தர்களுடைய பெருமைகளையும், வரலாறுகளையும் எடுத்தியம்புகின்றது.

சேர வேந்தர்களுள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் வேந்தன் சேர நாட்டில் எழில் மிக்க நகரமாகிய வஞ்சிமா நகரைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டு வந்தான்; சோழன் மகளாகிய நற்சோணையை மணந்துகொண்டவன். அவன் இமயம் வரையில் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றவன். அதனுல் அவனை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று கூறுவர்; அவன் யவன

ரைப் போரில் வென்றவன் ; **கடம்பர்** என்னும் கப்பற் கொள்ளைக்காரர்களை வென்று அவர்களை அடக்கி யவன். **குமட்டூர்க் கண்ணனார்** என்னும் புலவர் இவன் பெருமையைப் பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தில் பாடியிருக்கின்றார்.

அத்தகைய சிறப்பு வாய்ந்த இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுடைய மகனே **சேரநாட்டுச் செம்ம லாகிய செங்குட்டுவன் ஆவன்.** இவன் சேர வேந்தர் களுள் சிறப்பும் புகழும் பெற்று வாழ்ந்தவன்.

**இளமையும் முடி சூடலும் :**

செங்குட்டுவன் உடல் உரமும் எழிலும் மிக்க வன். இளமையில் முறைப்படிக் கற்றிருந்தான். படைக்கலப் பயிற்சியை நன்கு பயின்றவன். இவ் வேந்தனுடைய தம்பியே அறிவுச்சுடராய் விளங்கிய இளங்கோவாகும். இளங்கோ இளமையில் துறந்த வர். தமிழ் நாட்டின் அழியாச் செல்வமாகிய **சிலப் பதிகாரம்** என்னும் நூலை இயற்றியவர். இளங்கோ துறவு பூண்டமைக்கு ஓர் காரணம் கூறுவர்.

ஒருநாள் நெடுஞ்சேரலாதன் தன் அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்தனன். அப்பொழுது செங் குட்டுவனும், இளங்கோவும் அருகில் இருந்தனர். அந்த அவையில் இருந்த ஓர் நிமித்திகன் எழுந்து " அரசே ! இளையவன் முகத்தில் அரசாளக் கூடிய எழில் அமைந்திருக்கின்றது. தங்கள் மக்கள் இருவ

ருள் இளையவனே, தங்கட்குப்பின் சேர நாட்டை ஆளுதற்கு உரியவன்.'' என்று கூறினார். சோதிடர் கூற்றுக்களைக் கேட்ட மூத்தவன் சற்று நாண முற்றான். உடனே அருகில் இருந்த இளங்கோ வெகுண்டு கூறலுற்றான். ''மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடல் முறை ஆகுமோ? அவ்வாறு ஊழ்வினை இருப்பினும் அதையும் யான் மாற்றி என் அண்ணனை அரசனாக்குவேன். அதற்காக இன்றே யான் துறவு கொள்ளுவேன்.'' என்று கூறி அன்றே உலகத்தைத் துறந்தான். அன்று முதல் இளையவனை **இளங்கோ அடிகள்** என்று அழைத்தனர். அவர், ஊருக்கு அருகாமையில் உள்ள **குணவாயிற் கோட்டம்** என்னும் இடத்திலேயே தங்கி ஒழுக்கத்துடன் கலையைக் கற்றுத் திகழ்ந்து வந்தார்.

**செங்குட்டுவன் ஆட்சியும் அரசியலும் :**

இமயவரம்பன் பன்னாள் ஆண்டுப் புகழுடன் விளங்கியவன், பெருநற்கிள்ளி என்னும் சோழனுடன் போர் செய்யச் சென்றான்; போரில் வீரவுலகு எய்தினன். உடனே செங்குட்டுவனே சேர நாட்டு ஆட்சியை ஏற்றனன். அப்பொழுது அவனுக்கு வயது இருபது. ஆண்டில் இளையவனாயினும், அறிவிலும், வீரத்திலும் மிக்கவனாய் விளங்கினான்.

இவன் ஆட்சி நேரிய முறையில் முன்னையோரினும் புகழெய்துமாறு விளங்கிற்று. இவன் நாட்டில் பாதுகாப்பிற்குரிய அரண்களை நன்கு அமைத்துப்

படைவலிமையைப் பெருக்கினான். இவன் அரசியலில் அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்ற ஐவருமே சிறந்து விளங்கினர். இவர்களை ஐம்பெருங் குழுவினர் என்று கூறுவர். இவர்களையன்றி, நாட்டின் ஆட்சியை நடத்தும் கரும வினைஞரும், அரசிறை வருவாய்களைக் கண் காணித்துவரும் கணக்கியல் வினைஞரும், அறங்களைப் பாதுகாக்கும் தரும வினைஞரும், படைத் தலைமை வகிக்கும் தந்திர வினைஞரும், அரசனுடைய காரியங் களுக்குரிய காலங்களை எடுத்துக்கூறும் பெருங்கணி யும் அரசனுடைய மந்திராலோசனைக்கு உரியவர் களாக இருந்தனர்.

செங்குட்டுவன் ஆட்சியில் **வில்லவன் கோதை** என் பான் தரைப் படைக்குத் தலைமை வகித்த பெறு வீரன். அழும்பில் வேல் என்பான் தேசவருவாய்க்குத் தலைமை வகித்தவன். இவன் அழும்பில் என்னும் ஊருக்குத் தலைவனாக இருந்து பெருமைபெற்றவன். சஞ்சயன், நீலன் என்போர் சிறந்த தூதுவர் களாய்த் திகழ்ந்தனர்.

இவ்வேந்தன் காலத்தில் வில், கயல், புலி ஆகிய மூன்றும் அமைந்ததோர் இலாஞ்சனையே அரசியல் முத்திரையாகத் திகழ்ந்தது. சோழ, பாண்டியர்களுக்குரிய புலியையும் மீனையும் தனக் குரிய வில்லோடு சேர்ந்த இலாஞ்சனையாகக் கொண் டிருந்தமையால் அக்காலத்துத் தமிழ் வேந்தர்களுள்

செங்குட்டுவனே தலைமை வகித்தவனாகத் திகழ்ந்தான் எனத் தெரிய வருகிறது.

செங்குட்டுவன் இளங்கோ வேண்மாள் என்னும், வேளிர் குலத்தைச் சேர்ந்த மங்கை நல்லாளை மணந்திருந்தான். குட்டுவஞ் சேரல் என்பான் இச்செங்குட்டுவனுடைய அருமை மகன். இவனும் தந்தையைப் போலவே எழிலுடன் திகழ்ந்தவன்.

**போர்ச் செயல்கள் :**

சிறந்த முறையில் நாடாண்ட செங்குட்டுவன் பகைவர் அஞ்சும் தோற்றப் பொலிவுடையவனாய் விளங்கினான் ; போர்ப் பயிற்சியில் இணையற்றவன். முதன் முதல் இவன் ஆற்றிய போரே வடநாட்டுப் போராகும். இவன் தந்தை இமயவரம்பன், பெருநற்கிள்ளியுடன் பொருது வீர உலகு புகுந்த பொழுது இவன் தாய் கற்பிற்கரசி நற்சோணையும் உடன் உயிர் நீத்தனள். செங்குட்டுவன் தந்தையுடன் உயிர் நீத்த தாயின் உருவத்தைச் சிலையில் பொறித்துக் கோயில் சமைத்து வணங்க நினைத்தான் ; மேலும், தன் தாய் கங்கைக்குச் சென்று நீராடவில்லை என்ற கவலை அவனுக்கு இருந்தது. ஆகையால், தாயின் உருவத்தில் படிவம் சமைத்துக் கங்கையில் நீராட்டித் தம் நாட்டிற்குக் கொணர வேண்டும் என்று நினைத்தான். அதற்காகச் செங்குட்டுவன் படிவம் சமைத்துக் கொண்டு கங்கையில் நீராட்ட வட நாட்டிற்கு நால் வகைப்படைகளுடன் சென்றான்.

அப்பொழுது அவனை வட நாட்டு மன்னர்கள் ஒன்றுகூடி எதிர்த்தனர். அதற்கு அஞ்சுபவன் செங்குட்டுவனா? அவர்களைப் போர் முகத்தில் ஆண் சிங்கம் போல் எதிர்த்தான்; பெருவெற்றி எய்தினான்; வட நாட்டு வேந்தர்கள் எதிர்க்கலாற்றாது நிலைகலங்கிச் சென்றனர். சிலர் முதுகு காட்டி ஓடினர்; சிலர் மாய்ந்தனர்.

பின்னர் செங்குட்டுவன் தன் தாயின் சிலையைத் தன் உளம் களிக்குமாறு நீராட்டித் தூய்மையாக்கி எடுத்துக்கொண்டு தன் நாட்டிற்குத் திரும்பினன். வெற்றி வீரர்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் வழி நடக்கும் துன்பத்தையும் அறியாதவராயினர். செங்குட்டுவன் மகிழ்ச்சியோடு வஞ்சி வந்து சேர்ந்தான். தன் தாய்க்குக் கோயில் சமைத்தனன். அவன் இளமையில் ஆற்றிய வெற்றியைக் கேட்ட அவன் நாட்டு மக்கள் வாயார வாழ்த்தினர். இதுவே செங்குட்டுவனது முதற் போர்.

செங்குட்டுவனுடைய பெரு வெற்றியைக் கண்டு சோழரும் பாண்டியரும் பொறாமை கொண்டனர். செங்குட்டுவனை ஒழிக்க எண்ணினர். மைசூர் நாட்டிற்குத் தெற்கில் கொடுகூர் என்று ஒரு நகர் இருந்தது. கொடுகூரைத் தலைநகராகக் கொண்டு **கொங்கர்** என்பவர் ஆண்டு வந்தனர். சோழரும் பாண்டியரும் கொங்கரைத் துணையாகக் கொண்டு செங்குட்டுவனை எதிர்த்தனர்.

மாற்ருர் சூழ்ச்சிக்குச் செங்குட்டுவன் சளைக்க வில்லை; பெரும் படை திரட்டிச் சென்ருன். கொங்கு நாட்டில் போர் நடந்தது. செங்குட்டுவன் படைவீரர்கள் அஞ்சாது போர் செய்தனர். பகைவர் தோற்றனர் ; கொடுகூர் அழிக்கப்பட்டது. யாவரும் புகழத் தக்க பெருவெற்றியைச் செங்குட்டுவன் எய்தினன்.

செங்குட்டுவனது இரண்டாம் வெற்றி இனிமையாக முடிந்தது. இனி அவன் கடலில் கலம் செலுத்திப் போர் செய்ய வேண்டிய நிலைமை எய்தியது. அவன் நாட்டிற்கு அண்மையில் உள்ள தீவில் வசிக்கும் சிலர் செங்குட்டுவன் நாட்டிற்கு இன்னல் விளைத்துக் கொண்டிருந்தனர். அவர்களை ஒடுக்க நினைத்தான் செங்குட்டுவன். கடலைக் கடந்து சென்று செங்குட்டுவன் அப்பகையிர்மீது படை எடுத்துப் பெரும் போர் செய்தனன். வெற்றி செங்குட்டுவனுக்குக் கிட்டியது. அவன் காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டி, வெற்றியுடன் திரும்பினன்.

அதனுல் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனப் பெயரும் பெற்ருன்.

'' கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொடு உழந்த பணித்துறைப் பரதவ ''

(பதிற்றுப்பத்து 48)

என்ற பரணர் பாடிய பதிற்றுப் பத்தின் செய்யுள் அடிகள், இவனுடைய கடல் வெற்றியை கூறுகின்றன.

பழையன் என்பான் மோகூர் என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவன் பாண்டியனுடைய படைத் தலைவனாகவும் பெரு வீரனாகவும் விளங்கினவன். செங்குட்டுவனுடைய நண்பனாகிய அறுகை என்பானுடன் பழையன் பகைமை பூண்டு போர் தொடுத்தான். செங்குட்டுவன் தன் நண்பன் அறுகைக்கு உதவியாகச் சென்றான். பெரும் போர் மூண்டது. பழையன் தளராது போர் செய்தான். இருப்பினும் செங்குட்டுவனுக்கே வெற்றி கிட்டியது. செங்குட்டுவன் வெற்றி பெற்றதேயன்றி பழையனுடைய காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டிவிட்டு வெற்றி மேல் வெற்றியுடன் நாடு திரும்பினான்.

செங்குட்டுவன் தன் கிளைஞரைக் காப்பதில் தவறியவன் அல்லன். "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்ற முதுமொழியைக் குறிக் கோளாகக் கொண்டவன். காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்பான் செங்குட்டுவனுடைய அம்மான். அவன் மகன் **இளஞ்சோழன்** சோழநாட்டில் பட்டம் எய்துதற்கு உரியவன் ஆயினன். சோழ நாட்டில் சோழர் குலத்தைச் சேர்ந்த ஒன்பதின்மர் இவன் பட்டத்திற்கு வருதலைப் பொறாதவர்களாகிக் கலகம் விளைத்தனர். அவ்வரசுரிமையைத் தாம் பெற நினைத்தனர். இளஞ்சோழனைக் கொல்லவும் சதி செய்தனர்.

இளஞ்சோழன் இச்செய்தியைச் செங்குட்டு

வனுக்குத் தெரிவித்தான். போர் விருப்பம் கொண்ட செங்குட்டுவனுக்கு இளஞ்சோழன் அனுப்பிய செய்தி, தூங்குகின்ற புலியைத் தட்டி எழுப்பியது போலாயிற்று; சேர நாட்டை விட்டு மாமன் மகனுக்கு ஆறுதல் அளிக்கப் புறப் பட்டான். கடலனைய அவன் சேனை பொங்கி எழுந் தது. இத்தகைய நிலையில் கலகம் விளைத்த ஒன்பது சோழர்களும் **நேரி வாயில்** என்னுமிடத்தில் இளங்சோழனை எதிர்த்தனர். செங்குட்டுவன் இளஞ்சோழனுக்கு உதவியாகப் போர்முகத்துச் சென்றான். செங்குட்டுவன் படைமுன், எதிர்த்த ஒன்பது சோழரும் என்ன செய்ய முடியும்? பகை வர் முறியடிக்கப்பட்டனர். இளஞ் சோழனாகிய பெருநற்கிள்ளிக்குச் செங்குட்டுவன் முடிசூட்டிக் களித்துத் தன் நாடு திரும்பினன்.

இவ்வாறு பெருவெற்றிச் சிறப்புடன் ஆண்ட செங்குட்டுவன், தன் நாட்டில் இயற்கைக் காட்சி களோடு விளங்கும் மலைவளங்களைக் காணவேண்டும் என்று எண்ணிப் புறப்பட்டான். அவன் செல்லும் பொழுது நால்வகைப் படைகளும் முன்னே சென் றன. அரசனுடைய மனைவியும், தம்பியாகிய இளங்கோ அடிகளும், பெரும் புலவர் சாத்தனாரும் உடன் சென்றனர். அரசன் தன் பரிவாரங்கள் சூழ பெரியாறு என்னும் ஆற்றங்கரையில் வந்து தங்கினன். மலையின் அருகில் இணைந்துள்ள அந்த ஆற்றின் தோற்றமும், அருகில் உள்ள

இயற்கைக் காட்சிகளும் அவன் கண்ணைக் கவர்ந்தன.

நெடுங் குன்றம் என்னும் அம்மலைப் பக்கத்தில் வேடுவர் முதலிய மலைவாணர்கள் தங்கி இருந்தனர். அவர்கள் தங்கள் அரசன் வருகையை அறிந்தனர். உடனே மன்னவனைக்கண்டு வணங்க எண்ணினர், அவர்கள் யானைக்கொம்பு, அகில், கவரி, சந்தனக் கட்டை, அரிதாரம், கரும்பு, வாசனைப் பொருள்கள், மாங்கனி, பலாக்கனி வாழைக்கனி முதலியவற்றை யும், சிங்கக்குட்டி, புலிக்குட்டி, மான், மயில், குயில், கிளி முதலியவற்றையும் சேர்த்துக் கைப்பொருளாக எடுத்துக்கொண்டு அரசனுக்கு முன்னே வந்தனர். அரசனுக்கு அவர்கள் வருகை அறிவிக்கப்பட்டது. அரசன் உத்தரவுப்படி அவர்கள் அரசனைக் கண்டு கையுறைப்பொருள்களைக் கொடுத்து வணங்கினர். அரசன் அவற்றை ஏற்று வாழ்த்துரை கூறினன்.

அப்பொழுது அவ் வேடுவர்கள் அரசனைப் பார்த்து கூறத்தொடங்கினர் : '' ஆரியரை வென்ற வேந்தே ! வணக்கம். இம்மலையின்கண் நாங்கள் ஒரு அதிசயத்தைக் கண்டோம். ஒரு மங்கை தலைவிரி கோலமாய் அருகிலுள்ள வேங்கை மரத்தின் அருகில் வந்து நின்றாள். அப்பொழுது விண்ணினின்றும் ஒரு விமானம் கீழ் இறங்கியது. அவ்விமானத்தில் ஒளி வடிவுடன் அவள் கணவன் வீற்றிருந்தனன். விமானத்தில் வந்த அவன், மரத்தின் அடியில் நின்ற

அப்பெண்ணைத் தன்னுடன் விமானத்தில் ஏற்றிக் கொண்டு வானகம் புக்கான். அந்நங்கை எந்நாட்டவளோ நாங்கள் அறியோம், என்று கூறி அரசனை வாழ்த்தி வணங்கினர்.

வேட்டுவர் மொழிகளைக் கேட்டனன் செங்குட்டுவன்; சொல்லொணு வியப்பில் ஆழ்ந்தான்; உடனே அந்நங்கையின் வரலாற்றை அறிய ஆவலுள்ளவனுனன் ; அப்பொழுது அரசன் அருகில் வீற்றிருந்த புலவர் சாத்தனுர் அந்நங்கையின் வரலாற்றைக் கூறத் துவங்கினர். '' அரசே ! இங்கு வேங்கை மரத்தடியில் தங்கி, தன் கணவனுடன் வான்புக்க நங்கையாகிய கண்ணகி, தங்களிடம் அவளுக்கு ஏற்பட்ட இன்னலையும், அநீதியையும் கூறவந்தவள் போல வந்து, இந்நாட்டு மலையில் காட்சியளித்து மறைந்தனள். அவள் ஒரு கற்பிற்கரசி; பத்தினித் தெய்வம்; சோழ நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில், பெருங்குடி வணிகன் மாநாய்கன் மகளாய்த் தோன்றியவள். அவள் அவ்வூரில் கோவலன் என்பானை மணந்து நெறியுடன் இல்வாழ்க்கை நடத்தினுள். அப்பொழுது கோவலன், மாதவி என்னும் பரத்தையினிடத்தில் தன் வாழ்நாளைக் கழித்துத் தன்னுடைய பொருளையெல்லாம் இழந்தான். காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த இந்திர விழாவின்போது ஒரு நாள் மாலை நேரத்தில் மாதவிக்கும், கோவலனுக்கும் சிறிது பிணக்கு ஏற்பட்டது. அப்பொழுது கோவலன்

மாதவியைப்பிரிந்து, தன் இல்லம் ஏகிக் கண்ணகியை அடைந்தான். பிரிந்திருந்த கோவலனைக் கண்ட கண்ணகி அவனை வரவேற்றாள். உடனே கோவலன், 'இனிச் சோழ நாட்டில் இருப்பது தகாது', என்று கருதினான்; பாண்டிநாடு சென்று பொருள் ஈட்டிப் பிழைக்கலாம் என்று நினைத்தான். இருவரும் அன்றிரவே காவிரிப்பூம்பட்டினத்தை விடுத்துப் பாண்டி நாட்டிற்குப் புறப்பட்டனர்; செல்லும் வழியில் கௌந்தி அடிகள் என்னும் துறவியுடன் நட்புக் கொண்டு மதுரைமாநகரை அடைந்தனர். மதுரையில் ஆயர் சேரியில் மாதரி என்பாள் வீட்டில் கண்ணகியை அடைக்கலமாக வைத்தனன்: கண்ணகி கழற்றித் தந்த ஒற்றைச் சிலம்பினை எடுத்து விற்கச் சென்றான். இடைவழியில் பொற் கொல்லன் ஒருவனைக் கண்டு, அவனிடம் தான் கொண்டுவந்த சிலம்பினை விற்கக் கருதினான். அப்பொற்கொல்லன் முன்பே, பாண்டியனுடைய தேவியின் சிலம்பைக் களவாடியவன்; அவன்மேல் அரண்மனையில் உள்ளோர் ஐயுறவு கொண்டிருந்தனர்; அவன் அக்குற்றத்தினின்றும் தப்பித்தற்கு வழிவகுத்துக் கொண்டிருந்தான்; அந்நிலையில் கோவலனைக் கண்டதும், அவன் மகிழ்ச்சியுற்று, இப்பொற் சிலம்பினை அரசனிடம் காட்டி உய்யலாம் என்று நினைத்தான். கோவலனைத் தன்னுடைய குடிலில் இருக்கச்செய்து பொற்கொல்லன் சிலம்பைக் கையில் கொண்டு அரண்மனை அடைந்தான். அரண்மனைக்குச் சென்றதும் பொற்கொல்

லன் அரசனிடம் ‘ கள்வனைக் கொணர்ந்தேன் ’ என்றான். அப்பொழுது அரசன் அந்தப்புரத்திற்குச் செல்லும் நேரம்; ஊழ்வினைப் பயனால் ஆராயாது, ‘ கள்வனைக் கொன்று அச்சிலம்பினைக் கொணர்க ’ என்றனன். இம்மொழிகளையே பற்றுக் கோடாகக் கொண்ட பொற்கொல்லன் காவலாளிகளிடம் முறையிட்டுப் பின்னர் கோவலனை அழைத்து வந்தான். பொற்கொல்லன் சூழ்ச்சியால் கோவலன் கொல்லப்பட்டான். மறுதினம் இச்செய்தியை அறிந்தாள் கண்ணகி; வீராவேசம் கொண்டாள்; மிகுந்த சினத்துடன் அரண்மனை வாயிலை அடைந்து காவலாளிகளிடம் சொல்லியனுப்பினாள். அரசன் உத்தரவுப்படி அரச மண்டபத்தை அடைந்து தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை நிரூபிக்கலானாள். தன்னுடைய சிலம்பினுள் மாணிக்கப் பரல் இருப்பதாகக் கூறினாள். உடனே அரசன் சிலம்பினை வரவழைத்து உடைக்கச் செய்தான். சிலம்பு உடைந்து, மாணிக்கப்பரல் மன்னவன் வாயில் தெறித்தது. தன் பிழையை உணர்ந்த மன்னவன் ‘ யானோ அரசன்? யானே கள்வன் ’ என்று கூறி உடனே மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தனன். அவன் மனைவி கோப்பெருந்தேவியும் மாய்ந்தனள். கண்ணகி சினம் தணியாதவளாய் நகரை எரி கொளுவி, நேராக இச் சேர நாட்டுக்கு வந்தாள். அவள் ஓர் பத்தினித் தெய்வம் என்பதை உலகறியக் காட்டி மறைந்தனள்’’ என்று கண்ணகியின் வரலாற்றைக் கூறினார் சாத்தனார்.

சாத்தனார் கூறிய கண்ணகியின் வரலாற்றைக் கேட்ட சேரன் திடுக்கிட்டான் ; உடனே கூறினான். " தான் செய்த பிழையை ஏனைய அரசர் அறியும் முன்பு, பாண்டியன் உயிர் நீத்த செயல் புகழத் தக்கது. அவன் ஊழ்வினையால் ஆராயாமல் கொலை செய்யச் செய்தான், அவன் தீவினையால் ஆற்றிய வளைந்தகோலை, அவன் உயிர் நீத்த செயல் நிமிரச் செய்து செங்கோலாக்கியது " என்று கூறினான்.

அரசன் தேவியை நோக்கிப் 'பாண்டியனுடன் உயிர் நீத்த கோப்பெருந்தேவி, சினத்துடன் நம் நாட்டை நோக்கி வந்த கண்ணகி, ஆகிய இருவருள் யார் சிறந்தவர்?' எனக் கேட்டனன். அதற்குச் செங்குட்டுவன் மனைவி வேண்மாள் "அரசே! தன் கணவன் துன்பத்தைக் காணாது உயிர் நீத்த பாண்டி யன் பெருந்தேவி வான் இன்புறக் கடவுள் ஆயினள். ஆனால் நம் நாடு வந்த பத்தினித் தேவியாகிய கண் ணகியை வழிபட வேண்டியது இன்றியமையாதது" எனக் கூறினள். உடனே தேவி கூறியதைக் கேட்ட சேரன் அதை விரும்பி ஏற்று அவள் கருத்துப்படி நடக்கக் கருதி, அமைச்சர்களின் கருத்தை அறிய அவர்களை நோக்கினான். அமைச்சர்கள் அரசனைப் பார்த்து " நம் நாடு நோக்கி வந்த அப்பத்தினிக் கடவுளுக்குப் படிவம் சமைக்க வேண்டியது மிக இன்றியமையாதது. இதற்குரிய சிலையைப் பொதிய மலையினின்றேனும், இமயத்தினின்றேனும் எடுத்து வரவேண்டும் ; பொதியத்தினின்றும் கொணர்ந்த

கல்லைக் காவிரியாற்றிலும், இமயத்திலிருந்து கொணர்ந்ததைக் கங்கை யாற்றிலும் நீராட்டித் தூய்மை செய்வித்தல் மிகப் பொருத்தமானதாகும்.'' என்று கூறினர்.

இவற்றைக்கேட்ட அரசன் கூறுகின்றான்: ''பொதிய மலையிலிருந்து கல்லெடுத்துக் காவிரியில் நீராட்டிக் கொணர்தல் நமக்குச் சிறப்பைத் தருவதன்று. ஆதலால் இமயத்தினின்றும் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டித் தூய்மையாக்கி வருதலே நம் பெருமைக்கு ஏற்றதாகும்'' என்று கூறினான்.

உடனே வில்லவன்கோதை என்பான் வணங்கி ''பெருந்தகையே! நாம் இமயம் வரை செல்ல இருப்பது பத்தினிக் கடவுளைச் சமைப்பதற்கான சிலையின் பொருட்டே. ஆதலால் அங்குள்ள அரசர்களுக்கெல்லாம் நம் இலச்சினையைக் கொண்டநும் திருமுகத்தை விடுத்து முன்பே அறிவித்தல் நலம்'' என்று கூறினான்.

உடனே அருகில் இருந்த அழும்பில் வேள் என்னும் அமைச்சன், அரசனை நோக்கி, ''அரசர் ஏறே! நம் பகைவருடைய ஒற்றர்கள் நம் வஞ்சிமா நகரில் ஊருடுவித் திரிகின்றார்கள். அவர்கள் நம் நாட்டில் நடப்பவற்றை, அவ்வப்பொழுது அறிந்து, தம் தம் வேந்தருக்கு உடனுக்குடன், அறிவித்துக் கொண்டே இருக்கின்றார்கள். அவ்வொற்றர்களே, நம் வடநாட்டுச் செலவை இயம்பி விடுவார்கள்.

ஆகையால் நம் நாட்டில் மட்டும் பறை சாற்றினுல் சாலச் சிறந்தது.'' எனக் கூறினுன். இந்நிலேயில் அரசன் மறுநாளே தம் வடநாட்டுப் பயணத்தைப் பற்றிப் பறை சாற்றுமாறு, பணித்துவிட்டு அரண் மனேக்குச் சென்ருன். மறுநாள் காலேயில் அரச னுடைய, வடநாட்டுப் பயணம் பறை சாற்றப் பட்டது.

மறுநாள் அரசன், அமைச்சர் முதலியோர் புடைசூழ வடநாட்டுப் பயணத்தைப்பற்றி பேச, அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்தான். அப் பொழுது அரசன் ''வடநாட்டு மன்னர்களாகிய கன கரும், விசயரும் ஒரு திருமணக் காலத்தில் தமிழ் வேந்தர்களாகிய எங்களேப் புறக்கணித்துப் பேசினர். முன்பு எம் தாயின் படிமத்தை நீராட்ட வடநாடு சென்று வெற்றியுடன் திரும்பியதை, அவர்கள் கேவலமாகப் பேசியிருக்கிருர்கள். கனக விசயராகிய அவர்கள் ஊரில் இல்லாத காலத்தில் யான் வெற்றி கொண்டதாயும் அவர்கள் இருந்திருந்தால், யாம் இமயம்வரை சென்று வெற்றி கண்டிருக்க முடியாது என்றும், எம்மை அப்பொழுதே சிறைப்படுத்தி யிருப்பர் என்றும் இழிவாகப் பேசியிருக்கின்ருர்கள். அவர்கள் கூறிய கூற்றுக்களே அத்திருமணக் காலத் தில் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்கள் சிலர் இங்கு வந்தபொழுது எம்மிடம் எடுத்து இயம்பினர். அக்கனக விசயர்கூற்றுக்கள் எம்மையேயன்றி ஏனேய தமிழ் வேந்தர்களேயும் புறக்கணிக்கத் தக்கதாய்

இருக்கின்றது. எம்மையும் தமிழையும் புறக்கணித்துப்பேசிய அப்பகை வேந்தர்களை, இப்பொழுது பத்தினித் தெய்வத்திற்குச் சிலை எடுக்கச் செல்லும் பொழுது, வென்று அவர்கள் தலைமேல் அச்சிலையை ஏற்றி வருவேன். அவ்வாறு செய்யத் தவறுவேனாகில் யான் என் குடிகளை வருத்தும் கொடுங்கோல் அரசன் என்று பழிக்கப் படுவேன் ஆகுக '' என்று வீராவேசமாகக் கூறினான்.

உடனே சோதிடரைப் பார்த்து பயணம் செல்லுவதற்குரிய நேரத்தைக் கூறுமாறு கேட்டனன். சோதிடன், ' அரசே! இன்றே, இப்பொழுதே, நல்ல நேரமாகும். ஆகையால் நமது குடை, வாள் முதலியவற்றை இப்பொழுதே வடக்கு நோக்கி அனுப்புங்கள். தாங்கள் காலையில் புறப்படலாம் '' என்றான்.

**வட நாட்டுப் பயணம்:**

வெற்றி வீரனாகிய செங்குட்டுவன் மறுநாட் காலையில் வட நாடு செல்ல ஆயத்தமாயினன். போருக்குச் செல்லும் முன் வீரர்கட்குச் சிறந்த உணவு அளித்து மகிழ்விப்பது மரபு. அதனைப் '' பெருஞ்சோற்று நிலை'' என்பர். செங்குட்டுவன் புறப்படுமுன் தன்னுடைய வீரர்கட்கு பெரும் விருந்தளித்தான். அவர்கள், மகிழ்ச்சியுடன் உண்டு களித்தனர். மேலும் போருக்குச் செல்லும்போது வஞ்சிப் பூமாலை சூடுவது மரபு. அவ்வாறே வீரர்கள்

வஞ்சிமாலையைச் சூடினர். யாவரும் புறப்படச் சித்தமாயினர்.

செங்குட்டுவன் தான் வழிபடு கடவுளாகிய, சிவபெருமானை வழிபட்டான். முரசு வாத்தியங்கள் இடிபோல் முழங்கின. யாவரும் வெற்றியுண்டாகு மாறு வாழ்த்தினர். அரசன் பட்டத்து யானை மேல் ஏறினன். யானை புறப்பட்டது. அரசன் புறப் பட்ட காட்சி ஒரு பெரிய விழாவைப் போன்று இருந்தது. செல்லும்பொழுது ஆடலும், பாடலும், கூடிய மகிழ்ச்சியோடு யாவரும் சென்றனர். அவ் வாறு மகிழ்ச்சியோடு செல்லும்போது வீரர்கட்கு நடக்கும் வருத்தம் தெரியவேயில்லை. படைகள் பல இடங்களைக் கடந்து, ஆங்காங்கே தங்கி இளைப் பாறிக் கங்கைக் கரையை அடைந்தன. வழியில் செங்குட்டுவனுடைய நண்பர்களாகிய அரசர் முதலி யோர் உபசரித்தனர்; பல இடங்களைக் கடந்து, படைகள் கங்கைக் கரையை அடைந்தன.

நூற்றுவக்கன்னரர் என்பார் செங்குட்டுவனு டைய நண்பர். அவர் கங்கைக் கரையில் படகு களைக் கொணர்ந்து காத்திருந்தனர். அப்படகு களின் மூலம் வீரர்கள் யாவரும், கங்கை ஆற்றின் வட கரையை அடைந்தனர். அங்கு வந்ததும் நூற்றுவக்கன்னரர் செங்குட்டுவனை உபசரித்து அன்போடு வரவேற்றனர். அவர்களால் ஏற்படுத் தப்பட்ட பாசறையில் அரசனும் அவனுடைய படைகளும் தங்கினர்கள்.

வடநாட்டுவேந்தர்களாகிய கனகரும், விசயரும் செங்குட்டுவனுடைய வருகையை முன்பே அறிந்திருந்தனர். அவர்கள் செங்குட்டுவனை எதிர்த்து வெற்றி பெறலாம், என்று நினைத்தனர்; தம்முடன் ஆரிய அரசர்களான, உத்திரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்திரன், சுவேதன், என்பவர்களைச் சேர்த்துக் கொண்டு எதிர்த்தனர். வட அரசர் திரண்டு வருதலைக் கண்டான் செங்குட்டுவன்; இரையைத் தேடி வேட்டைக்குச் சென்ற சிங்கமொன்று யானைக் கூட்டத்தைக் கண்டு பாய்ந்தவாறு போல தன்னை எதிர்த்த வட வேந்தரது சேனையைக் கண்டு களித்துப் பொருவானாயினன்.

வட வேந்தரும், தமிழரும் பொருது நின்ற அப் பெரும் போரில் துகிற் கொடிகளின் பந்தர்களால் கதிரவன் கிரணங்கள் மறைப்புண்டன. திக்குகளினின்றும் எதிரொலி உண்டாகும்படிச் சங்கங்களும் நீண்ட கொம்புகளும், முரசங்களும் ஒலித்தன. நால்வகைப் படை வீரர்களும் கலந்தெதிர்த்த அப் போர்க்களத்தில் பூமியே கண்ணிற்குத் தெரியாத நிலையில் புழுதிகள் எழுந்தன. அப்புழுதி, யானையின் கழுத்திற் கட்டிய சங்குகளின் நாக்குகளில் புகுந்து அவற்றை ஒலிக்காவண்ணம் செய்தன. வீரர்களுடைய தோள்களும், தலைகளும் துணிக்கப்பட்டு வேறாயின. அவ்வுடற் குறைகள் கூத்தாடின.

வீரர்கள் ஒருவரையொருவர் வெட்டுவதாலும்

குத்துவதாலும் சிதறிய குருதி மழை பொழிவது போன்றிருந்தது. குருதி நாலா பக்கமும் பாய்ந் தன. அப்பொழுது அக்குருதி ஆறு பெருக்கெடுத்து ஓடுவது போல் இருந்தது. ஒடிந்து விழுந்த போர்க் கருவிகள் இரத்தச் சேற்றினுள் மறைந்து கிடந்தன. அவை வீரர்கள் கால்களிலும் தைத்தன; குதிரை, யானை இவற்றின் கால்களிலும் தைத்தன. போரின் ஊக்கத்தால் வீரர்கள் அவற்றைப்பொருட் படுத்தவில்லை,

யானைகள் பகை வீரர்களைத் தம் கொம்புகளால் குத்திக் கோத்துத் திரிந்தன. சில யானைகள் துதிக்கைகள் அற்று வீழ்ந்தன. அப்பொழுது அவை பிளிறும் ஓசை காதைச் செவிடாக்கும் நிலையில் இருந்தது. யானைகள் வேலால் குத்தப் பட்டுக் கீழே வீழ்ந்தன. அப்பொழுது உண் டான குருதி ஆறாய் ஓடியது. குதிரைகளின் கால் அறுபட்டன. அவை மார்பினால் நகர்ந்து சென் றன. சில குதிரைகள் பகைவர்களை உதைத்தன. அதனால் ஊறுபட்ட வீரர் பலர். கால் அற்று வீழ்ந்த வீரர் படுத்தபடியே குதிரைகளின் காலை வெட்டி னர்.

ஒரு காயம் பட்டுக் கீழே விழுந்தோர் கீழே விழுந்துகிடக்கும் போர்க் கருவிகளினால் பல காயங் களை அடைந்தனர். சிலர் மிகுந்த சினத்துடன் கண்களை உருட்டிப் பார்த்துக்கொண்டு போர் செய் தனர். ஆனால் அவர்கள் கீழே விழுந்து இறந்தனர்.

அப்பொழுது அவர்கள் கண்கள் திறந்தபடி இருந்தன. அவ்வாறு அப் போர்க்களத்தில் பிணங்கள் ஏராளமாய்க் கிடந்தன.

அப் போர்க்களத்தைக் கண்ட கழுகுகள் ஏராளமாய்ப் பறந்தன. சில கழுகுகள் பிணங்களின் வயிற்றைக் கொத்தி இழுத்தன. அப்பொழுது குடர் வேகமாக வெளிப்பட்டு வந்து கழுகுகளின் கழுத்தில் மாட்டிக் கொண்டன. அப்பொழுது கழுகுகட்கு மாலை போட்டதுபோல் காட்சி அளித்தது. வெண்ணிறக் கழுகுகளின் மேல் குருதி படிந்தன. அப்பொழுது அவை செந்நிறக் கழுகுகள்போல் காட்சி அளித்தன. அறுபட்ட உறுப்புக்களை நரிகளும் நாய்களும் இழுத்துச் சென்றன. சில நரிகள் ஊனைத் தின்னும்போது, அதனுள் இருந்த எலும்பு குத்தியது. அதனால் அந்நரிகள் பேரோசையிட்டன.

இவ்வாறு போர் தீவிரமாக நடந்தது. தேவாசுரப் போர் பதினெட்டு மாதங்கள் நடந்தன. பாரதப் போர் பதினெட்டு நாட்கள் நடந்தன. ஆனால் செங்குட்டுவன் ஆற்றிய வடநாட்டுப் போர் பதினெட்டு நாழிகையில் முடிந்தது. ஆரிய அரசர்கள் படைகள் தளர்ச்சியுற்றன.

பலவீரர்கள் போருக்குப் பயந்து காவியுடை தரித்துத் துறவிகள் எனக் கூறி மறைந்தனர்; சிலர் சாம்பலைப் பூசித் தாங்கள் சாமியார் என்று கூறிக் கொண்டு வெளியேறினர்; சிலர் சைனத் துறவிகள்

என்று கூறி ஓடினர். சிலர் பாணர்கள் என்றும், சிலர் கூத்தர்கள் என்றும் கூறிக்கொண்டே மறைந்தனர். சிலர் புறமுதுகு காட்டி ஓடித் தப்பினர். சிலர் தமிழ் வீரர் காலில் வீழ்ந்து உயிர்ப் பிச்சை கேட்டு உய்ந்தனர்.

இத்தகைய நிலையில் தமிழ் வேந்தரைப் புறக்கணித்துப் பேசிய கனக விசயர்கள் தவக்கோலம் பூண்டு ஓடத் தலைப்பட்டனர். அவர்களைத் தொடர்ந்து மேலும் சில வீரர்கள் ஓடினர். ஆனால் தமிழ் வீரர்கள் கனக விசயர்களைக் கண்டுபிடித்துத் தளையிட்டுச் செங்குட்டுவன் முன் நிறுத்தினர். செங்குட்டுவன் ஆணைப்படி அவர்கள் சிறை செய்யப்பட்டனர். இவ்வாறு செங்குட்டுவன் வெற்றியடைந்து வாகை மாலை சூடினன்.

போர் முடிந்தது. செங்குட்டுவன் வில்லவன் கோதையை அழைத்தனன். அவனிடத்தில் இமயத்தினின்றும் கல் கொணரும்படிக் கட்டளையிட்டனன். வில்லவன் கோதை இமயத்திற்குச் சென்று படிமத்திற்குரிய கல்லைத் தேர்ந்தெடுத்தான். அக்கல்லை இன்னிசை முழங்கக் கொணர்ந்து செங்குட்டுவன் முன்னால் வைத்தனன். அதனைக் கனக விசயர் தலைமேல் ஏற்றிக் கங்கையாற்றுக்குக் கொண்டுவரச் செய்தான். அதனைக் கங்கையில் நீராட்டித் தூய்மை செய்தனன். யாவரும் படகுகளில் ஏறிக் கங்கையின் தென் கரைக்கு வந்து சேர்ந்தனர்.



தமிழரைப் புறக்கணித்துப் பேசிய கனக விசயர்கள் கல் சுமத்தல்

செங்குட்டுவன் வந்து தங்குவதற்குக் கங்கைக் கரையின் தென்புறத்தில் ஓர் இடத்தை அழகு படுத்தி வைத்திருந்தனர். அரசன் உட்காருவதற்கு ஓர் எழில் பெற்ற மண்டபம் அமைக்கப்பட்டிருந்தது; மண்டபத்தின் முன்பு நாடக அரங்கும், பூப்பந்தலும் எழிலுறத் திகழ்ந்தன. வீரர்கள் தங்குவதற்கு அதைச் சுற்றிப் பாடி வீடு கட்டப்பட்டிருந்தது. அங்குச் செங்குட்டுவன் ஆண் சிங்கம் போன்று உட்கார்ந்தான். மந்திரிமார்கள் முதலிய யாவரும் அவரவர்கட்கு உரிய இடத்தில் அமர்ந்தனர். அவ்வரங்கில் ஆடல், பாடல் முதலியன முறையே நடந்தன. அன்று கழிந்தது. மறுநாள் பொழுது புலர்ந்ததும் செங்குட்டுவன் வெற்றி வீரர்களையும், மார்பில் புண் பட்டோரையும் புகழ்ந்து பேசினன். வீரர்கட்குப் பொன்னால் ஆகிய வாகை மலர்களைப் பரிசிலாகக் கொடுத்தான். அப்பொழுது செங்குட்டுவன் கொடுத்த பரிசில்கள் தான் பிறந்த நாளில் கொடுப்பதைக் காட்டிலும் மிகுதியாக இருந்தன; அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு போர்க் கருவிகளும் பட்டங்களும் ஈந்தனன். செங்குட்டுவன் பேரின்பக் கடலில் ஆழ்ந்தனன். ஆனால் நாவை இழந்த கனக விசயர் துன்பக் கடலில் ஆழ்ந்தனர்.

செங்குட்டுவன் யாவருக்கும் பரிசில்களையும் பட்டங்களையும் நல்கிய பின்னர் மாடலன் என்னும் தமிழ்நாட்டு மறையவன் அங்கு வந்தான். அவன்

அரசனுடன் அளவளாவினன் ; பின்னர் கனக விசயர் தலையில் கல் இருக்கக் கண்டனன். உடனே நகைச் சுவைத் ததும்பக் கூறினன் : " அரசே! நாடகக் கணிகை மாதவியின் பாடல், இங்ஙனம் கனக விசயரது தலைகளை நெரித்துவிட்டது!" என்று கூறினான். மாடலன் கூற்றுக்களைக் கேட்ட மன்னவன், அவற்றை விளக்கி உரைக்குமாறு கூறினன். உடனே மாடலன், " அரசே! காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரவிழா நடந்தது. அவ்விழா வின்போது, கோவலனும் மாதவியும் வரிப்பாடல் களைப் பாடினர். கோவலன் பாடிய பாட்டிலிருந்து மாதவிக்கு அவனிடத்து ஐயுறவு ஏற்பட, அவளும் வரிப் பாடல்களைப் பாடினள். உடனே கோவலன் மாதவியினிடத்துக் கோபித்த வண்ணம் அவனை விட்டுப் பிரிந்து கண்ணகியுடன் மதுரை வந்தான். ஊழ்வினையால் கோவலன் கொல்லப்பட்டான். பின்னர் பத்தினி கண்ணகி சேரநாட்டிற்கு வந்து நின் மலையின்கண் இருந்து தன் கணவனுடன் விண்ணகம் எய்தினள். அப்பத்தினிப் பெண்ணுக்குத் தாங்கள் சிலை எடுக்கவே இங்கு வந்தீர்கள். வந்த இடத்தில் இக்கனக விசயரை வென்று சிலையை எடுக்க, அச்சிலை கனக விசயர் தலைமீது இருக்கின்றது. கடற்கரையில் மாதவி பாடாமல் இருந்தால் இந்நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருக்குமா ?" என்று கூறி அரசனை வாழ்த்தினன்.

தன். மாடலன் பல நாடுகளைச் சுற்றிக்கொண்டு வந்தவன் ஆகையால், அவனிடத்து அவ்வந் நாடு களைப் பற்றி விசாரித்தனன். உடனே மாடலன், மதுரையில் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மகன் வெற்றிவேற் செழியன், தன் நாட்டிற்கு வந்த இன்னலை அறிந்து ஆயிரம் பொற்கொல்லரைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டனன் என்றும், காவிரிப்பூம் பட்டினத்தில் கோவலன் தந்தையும், கண்ணகியின் தந்தையும் கோவலனுக்கு நேர்ந்த செய்தியைக் கேட்டுத் துறவறம் பூண்டனர் என்றும் கூறி, மேலும் அங்கங்கே தான் கண்டவற்றையெல் லாம் எடுத்துக் கூறினன்.

மாடலன் கூற்றுக்களை யெல்லாம் செவியேற்ற செங்குட்டுவன் அம்மறையவனுக்கு, தன் நிறை யளவான ஐம்பது துலாம் பொன்னைப் பரிசிலாக நல்கினன். உடனே தன்னுடைய நாட்டிற்குத் திரும்பவேண்டுவதை அமைச்சர்களிடம் கூறினன். அமைச்சர்கள் வஞ்சிமா நகர்க்குப் புறப்பட ஏற் பாடு செய்தனர். செங்குட்டுவன் யாவருக்கும் விடை கொடுத்தனுப்பிவிட்டு தன்னுடைய படை கள் புடைசூழ யானையின்மேல் இவர்ந்து வஞ்சி நாட்டிற்குத் திரும்பினன்.

செங்குட்டுவன் வஞ்சி மாநகர் புகுந்தனன். மிகுந்த ஆரவாரத்துடனும் வெற்றிச் சிறப்புடனும் அவனை யாவரும் வரவேற்றனர்.

இத்தகைய நிலையில் தமிழரைப் புறக்கணித்துப் பேசிய கனக விசயரை, ஏனைய தமிழ்வேந்தராகிய பாண்டியரிடத்தும், சோழரிடத்தும் காட்டிவிட்டு அழைத்து வரும்படிக் கூறினன். அவர்களும் அவ்வாறே செய்தனர். அவர்கள் சோழபாண்டியரிடத்துச் சென்றுவிட்டுச் சேரனிடம் வந்தனர். அவர்கள் அரசனைப் பார்த்து " அரசே! அஞ்சியோடிய கனக விசயர்களை இவ்வாறு சிலையை வைத்துக் கொணர்தல் முறையன்று " என்று சோழரும் பாண்டியரும் கூறியதாகக் கூறினர். தூதுவர் பேச்சைக் கேட்ட அரசன் வெகுண்டான். கண்களில் சினக் கனல் எழுந்தது. உடனே அழும்பில்வேள் " அரசே! தங்களுடைய வெற்றியை அவர்கள் அறிந்தும் அவ்வாறு கூறியிருக்கின்றார்கள்; சினம் தணிக!" என்று கூறினர்.

உடனே மாடலன் அரசனைப் பார்த்து "அரசே! உமது ஆயுளில் பெரும்பகுதியைப் போரில் கழித்து விட்டீர்கள். இனி எஞ்சிய நாட்களை இன்ப வழியில் கழிக்க வேண்டாமா? மேலும் சோழ, பாண்டியர் அன்னியர் அல்லர். இனி மறக்கள வேள்வியை விடுத்துத் தாம் அறக்கள வேள்வியை நாடுதலே முறையாகும்" என்று கூறினன். அரசனும் மாடலன் கூற்றுக்களை ஏற்று மேல் நடக்கக் கூடியவைகளைப் பற்றிச் சிந்திக்கலாயினன். மாடலன் உரையில் ஆழ்ந்த செங்குட்டுவன், கனக விசயரிடத்து இரக்கம் காட்டினன். அவர்களை 'வேளாவிக்கோ' என்னும்

மாளிகையில் இருந்து வருமாறு பணித்தனன். மேலும் அவர்கட்கு வேண்டுவனவற்றைக் குறைவரச் செய்யவேண்டும் என்று தன் அமைச்சருக்குக் கட்டளையிட்டான். வேள்வி முடிந்ததும் அவர்களை ஊருக்கு அனுப்புவதாகவும் கூறினன்.

செங்குட்டுவன் இனி பத்தினிக்குக் கோட்டம் அமைக்கும் பணியில் ஈடுபட்டான். சிறந்த சிற்பிகளை வரவழைத்தான். கண்ணகியின் உருவத்தைத் தான் கொணர்ந்த சிலையில் பொறிக்குமாறு கட்டளையிட்டான். கண்ணகியின் உருவம் கல்லில் பொறிக்கப்பட்டது. செங்குட்டுவன் அவ்வுருவின் எழிலைக் கண்டு மகிழ்ச்சியுற்றான். விழா நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னான். கண்ணகிக்கு விழா நடக்கும் அக்காலத்தில் வேள்விகளும் நடக்கவேண்டும் என்று உத்தரவிட்டான்.

வஞ்சிமாநகர் முழுமையும் அழகுபடுத்தப்பட்டது. இன்னிசை விருந்துகள் நடந்தன. கண்ணகியின் கதை எங்கும் எடுத்து உரைக்கப்பட்டது. மக்கள் யாவரும் மகிழ்ச்சியோடு விழாவில் ஈடுபட்டனர். சிறைப்பட்டோர் விடுவிக்கப்பட்னர். பல ஊர்களி விருந்து விழாவைப் பார்க்க மக்கள் வந்திருந்தனர். பல நாடுகளிலிருந்து மன்னர்கள் வந்திருந்தனர். குறித்த நன்னளில் விழா துவக்கமாயிற்று, கோட்டத்தில் சிலையை நிறுவித் தூநீர் ஆட்டி அணிபெறச்

செய்தனர் : அப்பொழுது செங்குட்டுவன் முதலிய யாவரும் சிலையை வழிபட்ட வண்ணம் நின்றனர்.

இதற்கிடையில் காவிரிப்பூம் பட்டினத்தில் கோவலன் கொலையுண்டதை அறிந்து கண்ணகியின் செவிலித்தாய் ஒருத்தி, கோவலன் இறந்தான் ; கண்ணகியின் கதி யாதாயிற்றோ என்ற ஏக்கத்தால் அவளைத் தேடும் பொருட்டு அவ்வூர்ச் சாத்தன் கோவிலில் வாழும், பார்ப்பனத் தோழியாகிய தேவந்தி என்பாளையும், கண்ணகியின் தலைமைத் தோழியையும் அழைத்துக் கொண்டு பாண்டி நாட்டிற்கு வந்தனள்.

அம்மூவரும் நேராகப் பாண்டி நாட்டில், கண்ணகியை அடைக்கலம் வைத்த மாதரியின் வீட்டை அடைந்தனர். அங்கு மாதரியின் மகள் ஐயை என்பாள் தனியே இருக்கக் கண்டனர்.

கோவலன் கொலையுண்ட துக்கம் தாளாமல் மாதரி இறந்தாள் என்றும், கண்ணகி பாண்டி நாட்டை விடுத்துச் சென்று விட்டாள் என்றும் அவர்கள் அறிந்து கொண்டனர். உடனே ஐயையும் அவர்களுடன் புறப்பட்டனள். வையைக் கரை வழியே கண்ணகி சென்றாள் என்பதனை அவர்கள் அறிந்து கொண்டனர். நால்வரும் அவ்வழியே கண்ணகியைத் தேடிக்கொண்டு நெடுந்தூரம் சென்றனர்.

அவர்கள் பாண்டிய நாட்டின் எல்லையைக் கடந்து சேர நாட்டை அடைந்தனர். நேராகச் சேர நாட்டில் உள்ள **நெடுவேள்** குன்றம் என்னும் இடத்தை அடைந்து அங்குள்ள வேடுவர் களைப்பார்த்து கண்ணகியைப் பற்றி விசாரித்தனர். அங்குள்ள வேடுவர்கள் கண்ணகி அங்கு வந்ததை யும், அவள் கணவனுடன் வான ஊர்தியில் ஏறிச் சென்றதையும், செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் அமைத்திருப்பதையும் கூறினர்; உடனே அவ்வேடுவர் மூலம் கண்ணகி கோட்டத்திற்குச் செல்லும் வழியை அறிந்து கொண்டு அங்கு விரைந்து நடந்து சென்றனர்; கண்ணகி கோட்டத் திற்கு அருகில் திரள் திரளாக மக்கள் குழுமியிருப் பதனைக் கண்டனர். அவர்கள் மிகுந்த வேகத்தோடு கூட்டத்தை விலக்கிக் கொண்டு கோட்டத்திற்குள் சென்றனர்.

அப்பொழுது கோட்டத்தில் விழா மிகச் சிறப் பாக நடந்து கொண்டிருந்தது. அந்நால்வரும் அங்கு வந்து சிலையைப் பார்த்தனர். அம்மட்டோ! அப்படிமத்தின் அருகில் அவர்கள் ஓடி, அதனைத் தழுவி அழத் துவங்கினர்.

அப்போது அங்கிருந்த செங்குட்டுவன் முதலிய யாவரும் இவர்கள் செயல்களைக் கண்டு திகைத்த னர். உடனே தேவந்தி சிலையைப் பார்த்து, "தோழீ உன் கணவனுக்கு வரக்கூடிய இன்னலை

அப்பொழுதே கனவு கண்டு உரைத்தாயே! அப்பொழுது நான் உன் மொழிகளைப் பொருட்படுத்தவில்லையே! உன் துக்கத்தைக் கேட்டு—உன் மாமியும் உன் தாயும் பாண்டிய நாட்டில் மாதரியும் உயிர் நீத்தனரே! நீர் அறியீரோ!'' என்று அழுதனள்.

உடனே செவிலித்தாய் சிலையைத் தழுவி '' கண்ணகி! வானகம்புக்க தோழீ! உன் தந்தையும் மாமனும் உங்கள் துக்கத்தை நினைத்துத் துறவுக்கோலம் பூண்டதை அறியீரோ!'' என்று துடித்து அழுதனள்.

அருகில் நின்ற தலைமைத் தோழி சிலையை நோக்கி '' என் அன்பே! நீ அறியாயோ! கோவலனுக்கு ஏற்பட்ட தீங்கை நினைத்து வருந்தி மாதவி துறவு பூண்டனளே! அவள் மகள் மணிமேகலை இளமையிலேயே துறவு பூண்டனளே!'' என்று அவர்கள் மூவரும் வருத்தத்துடன் இவ்வாறு அழுதனர். மறுபடியும் தேவந்தி சிலையைப்பார்த்து, '' தோழீ! இதோ ஐயையும் வந்துள்ளாள். அவளைக் காணவில்லையோ!'' என்று கூறிக் கதறினள்.

தேவந்தி கூறி முடித்தவுடன் வானத்தில் கண்ணகி மின்னற்கொடி போன்று தோன்றி அவர்கட்குக் காட்சி அளித்தனள்.

வானத்தில் தோன்றிய மின்னல் [illegible] கண்ட செங்குட்டுவன்—

"இவள் தானா பத்தினித் தெய்வம் !" என்று கூறினான்.

உடனே வானத்தினின்றும் கண்ணகியின், வாக்காக ஒரு ஒலி எழுந்து, "தோழிகாள் ! பாண்டியன் குற்றமற்றவன் ; விண்ணுலகத்தில் வானவர்களால் சிறப்பிக்கப் படுகின்றான் ; நான் இத் தெய்வப்பிறவி எடுத்ததற்குப் பாண்டியனே காரணமாகும். யான் அவனுடைய மகளாகவே கருதி இருக்கின்றேன். அடிக்கடி நான் செங்கோடு என்னும் குன்றின் மேல் விளையாட வருவேன். நீங்கள் அங்கு வாருங்கள்" என்று மொழிந்தது.

அப்பொழுது அங்கிருந்த யாவரும் வியப்படைந்தனர். உடனே கண்ணகியின் தோழியர், செங்குட்டுவனை வாழ்த்தினர். மறுபடியும் கண்ணகி நீடூழி வாழ்க ! என்று செங்குட்டுவனை வானத்தினின்றும் வாழ்த்தினள். பின்னர் செங்குட்டுவன் தேவந்தியைக் கேட்டு ஆவலுடன் அங்கு வந்தவர்கள் யாவர் என்பதை அறிந்து கொண்டான்.

பின்னர் தேவந்தி, செங்குட்டுவனிடத்தில் மாதவி மகள் மணிமேகலை துறவு பூண்டதையும் அவளுடைய முழு வரலாற்றையும் கூறி அப்பொழுது அவள் உலக அறவியில் அறச் செயல்களைப் புரிந்து வருகின்றாள் என்றும் சொல்லியருளினாள்.

மணிமேகலை வரலாறுகளைக் கேட்ட செங்குட்டுவன் திகைத்துக் கொண்டிருக்கும்போது திடீரென்று தேவந்தியின் மேல் சாத்தன் என்னும் தெய்வம் ஆட்சிகொண்டது. அவள் உரத்தக் குரலில் அருகில் உள்ள மாடலனைப் பார்த்துப் பேசத் துவங்கினாள். '' மாடல ! நான் சாத்தன் என்னும் கடவுள் ; இவ்வூரில் '' அரட்டன் '' என்னும் செட்டி உள்ளான். அவனுக்குப் பெண் குழந்தைகள் இரட்டையர்களாகத்தோன்றியுள்ளார்கள். காவிரிப்பூம்பட்டினத்தில் இறந்த கோவலன் தாயும், கண்ணகியின் தாயுமே அக்குழந்தைகளாகப் பிறந்துள்ளனர். மதுரையில் இறந்த மாதரி இவ்வூர்க் கோவிலில் பூசாரியின் மகளாகப் பிறந்திருக்கின்றாள். அம் மூன்று சிறுமியரும் அதோ வரிசையாக நிற்கின்றனர். உன் கையில் உள்ள அந்தச் சிறுகுடம் நீ என்னுடைய கோவிலுக்கு வந்தபோது நான் உனக்கு அளித்ததை அறிவாய். அதிலுள்ள நீரை அச் சிறுமியர் மேல் தெளித்தால் அவர்கள் தங்கள் பழம் பிறப்பைக் கூறுவார்கள்.'' என்று கூறியவுடன் தேவந்தி உரிய உருவை எய்தினாள்.

தேவந்தியின் மூலம் எழுந்த கூற்றுக்களைக் கேட்ட செங்குட்டுவனுக்கு எல்லாம் விந்தையாகவும். திகைப்பைத் தரத்தக்கதாகவும் இருந்தன. செங்குட்டுவன் மாடலனைச் சிறுமியர் தலையில் நீரைத் தெளிக்கச் சொன்னான். மாடலன், செங்குட்டுவன் கட்டளைப்படி தன்னுடைய கையில் இருந்த குடத்

திலிருந்து நீர்த்துளியை அச் சிறுமியர் தலையில் தெளித்தான். அவர்கள் உடனே பழைய பிறப்பை அறிந்து கண்ணகி சிலையைப் பார்த்து அழுதனர். இச்செயலைக்கண்ட செங்குட்டுவன் தேவந்தியைக் கண்ணகியின் கோட்டத்திலேயே இருந்து வழி பாடாற்றுமாறு கட்டளை புரிந்தான். அவளும் அப்படியே இருந்தனள்.

அங்கு வந்திருந்த சோழ, பாண்டியர், நூற்று வர்கன்னர், மாளவ வேந்தர், இலங்கைக் கயவாகு, கனகவிசயர் முதலிய யாவரும் கண்ணகியை வணங்கி னர் ; தங்கள் நாட்டுக்கும் எழுந்தருளுமாறு மீண் டும் தொழுதனர்.

விழா முடிந்தது. யாவரும் விடைபெற்றனர். அவ்வவர் நாட்டரசர்களும், செங்குட்டுவனிடம் விடை பெற்றுத் தம் நாடு திரும்பினர். கனக விச யரும் செங்குட்டுவனிடமிருந்து விடைபெற்றுச் சென்றனர். அவர்கள் தம் நாட்டில் கற்பிற்கரசிக் குக் கொட்டம் அமைத்து வழிபட்டனர். இவ் வாறாகக் கற்பிற்கரசியைக் கடவுளாகப் போற்றும் பழக்கம் எல்லா நாட்டிலும் பரவிற்று.

பரணர் என்பார் செங்குட்டுவனுடைய அவைக் களப் புலவர் ஆவர். அவர் செங்குட்டுவனுடைய புகழை ஐந்தாம் பத்தில் பாடினர். செங்குட்டுவன் அப்புலவருக்குப் பெருவிருந்தளித்து ஏராளமான

பரிசில்களை நல்கினன். மேலும் பரணர் அரண்மனையி லேயே இருந்துகொண்டு அரசன் மகன் குட்டுவஞ் சேரலுக்குப் பாடம் கற்பித்தனர். அவனும் மிக்க ஆர்வத்தோடு கற்றுக் கொண்டான். செங்குட்டுவ னும் அவருக்கு அப்பொழுதப்பொழுது ஆவன புரிந்து வந்தான்.

கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய செங்குட் டுவன், பல புலவர்களை ஆதரித்து அரிய அறச் செயல்களைப் புரிந்து இறுதியில் அமைதியாக ஆண் டவன் திருவடி எய்தினன். அவனுடைய அருங் குணங்களும், இலக்கிய அறிவும், என்றும் நிலைத்து நிற்கின்றன.

---

## பயிற்சிகள்

1. இளஞ்சேட் சென்னி காலத்தில், காவிரிப்பூம் பட்டினத்தின் பெருமையையும், அந்நகர் பொலிவுற்றிருந்ததற்குக் காரணங்களையும் தொகுத்து எழுதுக.

2. திருமாவளவனுக்கு இளமையில் சதிகாரர் செய்த சூழ்ச்சிகளையும், அவன் உய்ந்த வரலாற்றையும் எழுதுக.

3. அமைச்சர்கள் சோழ நாட்டு ஆட்சியை ஏற்று நடத்தியபொழுது அந் நாட்டு நிலைமையைப் பற்றி வரைக.

4. கரிகாலன் சோழ நாட்டில் ஆட்சி பெற்ற வரலாற்றை எழுதுக.

5. கரிகாலன் வேளிர்களுடன் ஆற்றிய 'போரும் முடிவும்' பற்றிச் சுருக்கி எழுதுக.

6. 'கரிகாலனது இமயவெற்றி' என்பது பற்றி ஓர் கட்டுரை வரைக.

7. கரிகாலன் காவிரிக்குக் கரை கட்டி அமைத்த வரலாற்றை எழுதுக.

8. 'கரிகாலன் கண்ட உறையூர்' என்பதுபற்றி ஒரு கட்டுரை எழுதுக.

9. பொருநனை ஆற்றுப்படுத்திய வரலாற்றைச் சுருக்கமாக எழுதுக.

10. சோழ நாட்டில் நானிலங்கள் எவ்வாறு வர்ணிக்கப் பட்டிருக்கின்றன ?

11. பாண்டி நாட்டின் சிறப்பினைத் தொகுத்து எழுதுக,

12. வழுதி வேங்கை மார்பனை வென்ற வரலாற்றினை எழுதுக.

13. உக்கிரப் பெருவழுதி வடநாடு சென்று திரும்பிய வரலாற்றை வரைக.

14. வழுதிக்கும், சேர சோழருக்கும் நிகழ்ந்த உரையாடல்களை எழுதுக.

15. அகநானூறு தொகுக்கப்பட்ட வரலாற்றினைச் சுருக்கி எழுதுக.

16. நெடுஞ் சேரலாதன் வரலாற்றையும், இளங்கோவடிகள் துறவு பூண்ட வரலாற்றையும் எழுதுக.

17. செங்குட்டுவன் ஆற்றிய முதற்போரை விளக்கி எழுதுக.

18. செங்குட்டுவன் கொடுகூர்க் கொங்கர், பழையன், ஆகியோருடன் ஆற்றிய போர்களைத் தொகுத்து வரைக.

19. செங்குட்டுவன் மலை வளம் காணச் சென்ற வரலாற்றினையும் அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் சுருக்கி வரைக.

20. சாத்தனூர் செங்குட்டுவனிடத்தில் கூறிய பத்தினிப் பெண் வரலாற்றினை எழுதுக.

21. சேரநாட்டுச் செம்மல் வடநாடு மெல்லக் காரணமாக இருந்த நிகழ்ச்சிகளையும் அவன் புறப்பட்ட போது நிகழ்ந்த காட்சிகளையும் எழுதுக.

22. செங்குட்டுவன் கங்கைக் கரையில் வீரர்களுக்குப் பரிசளித்த வரலாறும் 'மாடவன் சந்திப்பும்' என்பது பற்றி ஒரு கட்டுரை வரைக.

23. கண்ணகியின் தோழியர்கள் கோட்டத்தில் தோன்றிய வரலாற்றினை எழுதுக.

24. செங்குட்டுவன் பத்தினித் தெய்வத்திற்குக் கோட்டம் அமைத்த வரலாற்றினை வரைக.

---

14. வழுதிக்கும், சேர சோழருக்கும் நிகழ்ந்த உரை யாடல்களை எழுதுக.

15. அகநானூறு தொகுக்கப்பட்ட வரலாற்றினைச் சுருக்கி எழுதுக.

16. நெடுஞ் சேரலாதன் வரலாற்றையும், இளங்கோ வடிகள் துறவு பூண்ட வரலாற்றையும் எழுதுக.

17. செங்குட்டுவன் ஆற்றிய முதற்போரை விளக்கி எழுதுக.

18. செங்குட்டுவன் கொடுகூர்க் கொங்கர், பழையன், ஆகியோருடன் ஆற்றிய போர்களைத் தொகுத்து வரைக.

19. செங்குட்டுவன் மலை வளம் காணச் சென்ற வரலாற்றினையும் அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் சுருக்கி வரைக.

20. சாத்தனார் செங்குட்டுவனிடத்தில் கூறிய பத்தினிப் பெண் வரலாற்றினை எழுதுக.

21. சேரநாட்டுச் செம்மல் வடநாடு செல்லக் காரண மாக இருந்த நிகழ்ச்சிகளையும் அவன் புறப்பட்ட போது நிகழ்ந்த காட்சிகளையும் எழுதுக.

22. செங்குட்டுவன் கங்கைக் கரையில் வீரர்களுக்குப் பரிசளித்த வரலாறும் 'மாடவன் சந்திப்பும்' என்பது பற்றி ஒரு கட்டுரை வரைக.

23. கண்ணகியின் தோழியர்கள் கோட்டத்தில் தோன் றிய வரலாற்றினை எழுதுக.

24. செங்குட்டுவன் பத்தினித் தெய்வத்திற்குக் கோட் டம் அமைத்த வரலாற்றினை வரைக.

# EMAYAM KANDA MOOVAR

BY

VIDWAN A. NARAYANASAMY

PUBLISHER

THE MADRAS PREMIER CO

33 BROADWAY MADRAS 1

*Re. 1|-*

Printed by Thompson & Co Private Ltd (Minerva Press)
33 Broadway Madras 1